காவியம்
படைக்கட்டுமே!

உங்கள் அழகு
ஒரு தெவிட்டாத
ஓவியம்.

அது சாரதாஸின்
பட்டுப் புடவையுடன்
சேர்ந்து காவியம்
படைக்கட்டுமே.

திருமண பட்டுப்
புடவைகளுக்கு

# சாரதாஸ்

பட்டுப் புடவைகளில் நாகரிகமான டிசைன்களுக்கு புகழ்பெற்ற பெயர்

தன் பில்டிங்
மவுண்ட் ரோடு
சென்னை-600 002
போன்: 87177

N.S.B. ரோடு
திருச்சி-620 002
போன்: 7077

# எண்ணிய வண்ணம் எண்ணற்ற டிசைன்

# மதுரை துணிகள் – அணிந்திடப் பெருமை

பாலியெஸ்டர் மற்றும் பாலியெஸ்டர் இழைகளில்
சூட்டிங்குகள் மற்றும் ஷர்ட்டிங்குகளில்
எண்ணிலடங்காத ரகங்கள்.

மதுரை துணிகள்—தயாரிப்பாளர்கள்:

## மதுரை கோட்ஸ்



டிஸ்ட்ரிபியூட்டர்கள் : மதுரா சௌத் இந்தியா கார்ப்பொரேஷன் (பி) லிட்., 45, மூர் தெரு, சென்னை-600 001 ■ T. M's டெக்ஸ்டைல்ஸ் 126, தெற்கு மாசி வீதி, மதுரை ■ சௌத் டெக்ஸ் டைல்ஸ், 98, வடக்கு ரத வீதி, திருநெல்வேலி டவுன் - 627 006 ■ VVCR முருகேச முதலியார் & சன்ஸ், 87, கன்னாரத் தெரு, செவ்வாய்ப்பேட்டை, சேலம் ■ VVCR முருகேச முதலியார் & சன்ஸ், சிவசண்முகம் பிள்ளைத் தெரு, ஈரோடு ■ ஹாஜி P. சைத் முகம்மது திருநகர்.

MCL-170 TAM

# ரிப்பேருக்காக அதிக செலவு செய்யாதீர்கள்

## தவறாமல் உபயோகியுங்கள், முச்செயல் புரியும்




# த்ரீ-இன்-ஒன் ஆயில்

தையல் மெஷின், சைக்கிள், மின்விசிறி, பூட்டு, கீல் மற்றும் பல்வேறு வீட்டுப் பொருட்களைத் தவறாமல் மசகிட்டு பராமரிக்க வேண்டும். இல்லையேல், அவை துருப்பிடித்து பாழாகிவிடும்; தூசி அடைத்துக்கொள்வதால், தடங்கலின்றி அவை இயங்குவது பாதிக்கப்படும்.

எல்லா எண்ணைகளுமே ஒரே சீராகப் பலன் தருவதில்லை. த்ரீ-இன்-ஒன் ஆயில் தரமுயர்ந்த எண்ணை. அது 3 வழிகளில் செயலாற்றுகிறது.

✓ **மசகிடுகிறது**
—உங்கள் இயந்திரம் தடங்கலின்றி இயங்க உதவுகிறது.

✓ **சுத்தம் செய்கிறது**
—இது பிசுக்கை அகற்ற பிரத்தியேகத் திண்மையுடன் தயாரிக்கப்பட்டிருப்பதால், சீராகப் பரவி, தூசி அடைத்துக் கொள்ளாமல் தடுக்கிறது.

✓ **துருப்பிடிப்பதைத் தடுக்கிறது**
—இந்த எண்ணையில் மட்டுமே அலாதியான, துருவை எதிர்க்கும் பொருள் கலந்துள்ளது.

உங்கள் வீட்டிலுள்ள விலையுயர்ந்த பொருள்களைத் தவறாமல் சரியான மசகெண்ணை இட்டுப் பாதுகாத்திடுங்கள். த்ரீ-இன்-ஒன் ஆயில் உபயோகியுங்கள்.



# த்ரீ-இன்-ஒன் ஆயில்

## பாதுகாப்புக்கு—ஓர் இணையற்ற எண்ணை.

® Licensed user of T. M. : Geoffrey Manners & Co. Ltd.

GM : T/1/75 A

நீடித்த
அழகுக்குத் தேவை
தூய்மையான மேனி.






# லாக்டோ-காலமைன் ஒன்றுதான் உங்கள் மேனியை அனைத்திலும் அருமையாகப் பாதுகாக்கும்.

உங்கள் மேனியைப் பராமரிக்க லாக்டோ-காலமைன். உங்கள் மேனியைத் தூய்மையாகவும் புதுமையாகவும் வைத்திருக்கக் கூடிய சேர்க்கைப் பொருட்கள் விசேஷ முறையில் இதில் கலக்கப் பட்டுள்ளன. எல்லாம் ஒன்றில் இணைந்த அழகுப் பராமரிப்பு-லாக்டோ காலமைன்-அஸ்ட்ரின்ஜெண்ட், மாயிஸ்சரைஸர், ஃபவுண்டேஷன் க்ரீம் மூன்றும் இணைந்த தன்னிகரற்ற அழகு சாதனம்.

அதனை முறையாக உபயோகித்து வரவும். உங்கள் மேனி இயற்கையாக மெருகேறுவதைக் கண்கூடாகக் காண்பீர்கள்.




3 வசதியான சைஸ்களில் கிடைக்கிறது:
110 மி.லி.
60 மி.லி. 28 மி.லி.

க்ருக்ஸ் லாக்டோ-காலமைன், ஒரு ரெஜிஸ்டர்டு டிரேடு மார்க். இதனைத் தவறாகப் பயன்படுத்துபவர்கள் சட்டப்படி தண்டிக்கப் படுவார்கள்.



உண்மையான லாக்டோ-காலமைன் தானு என்று உறுதி செய்து கொள்வதற்கு, எப்போதும் இந்த க்ருக்ஸ் சின்னத்தைப் பார்த்து வாங்குவீர். அதோடு, க்ருக்ஸ் முத்திரையும் உடையாமல் இருக்கிறதா என்று உறுதி செய்து கொள்ளுங்கள்.

டுஃபார்-இன்டர்ஃப்ரான் லிமிடெட்
த.பெ. எண் 6582, பம்பாய்-400 018

க்ருக்ஸ்

## லாக்டோ-காலமைன் அதுவே எழில் பராமரிப்பு ரகசியம்.

Sista's-DIL-45-P/76/Tam

# ஓடோமாஸ் மட்டுமே உங்களுக்குக் கொசுக் கடியிலிருந்து 2-விதங்களில் பாதுகாப்பை அளிக்கிறது.

## நீங்கள் இரவில் நிம்மதியாக உறங்க உதவுகிறது.

இதர கொசு விரட்டியைப் போலல்லாது ஓடோமாஸ் உங்களைப் பாதுகாக்கிறது.



அதன் வாசனை கொசுக்களை விரட்டி அடிக்கிறது.



அதன் ஒப்பற்ற கலவைப்பொருள் உங்கள் சருமத்தை இரவு முழுவதும் கொசுக்களிலிருந்து கவசம்போல் காக்கிறது.

இன்று இந்தியாவில் அதிகமாக விற்பனையாகும் கொசு விரட்டி ஓடோமாஸ் என்பதில் வியப்பு எதுவுமில்லை.

**உடனே**

# ஓடோமாஸ்

**உபயோகியுங்கள்.**

**இல்லையேல் கொசுக்கள் உங்களுக்கு சொல்ல முடியாத தொல்லையைத் தரும்.**




CHAITRA-BLS-86 TAM

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்
"பாலுஸேரி பில்டிங்ஸ்", 3, சிங்காராச்சாரி தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை – 600 005
தந்தி: 'EVERMANS'. போன்: 841194 & 843938. தபால் பெட்டி: 414

### நீண்டகாலச் சிட்டுகள்

50 மாதங்கள் — 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTN | ரூ. 100/- | ரூ. 5,000/- |
| LTO | ரூ. 50/- | ரூ. 2,500/- |
| LTP | ரூ. 20/- | ரூ. 1,000/- |

40 மாதங்கள் — 40 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500/- | ரூ. 20,000/- |
| LTB | ரூ. 250/- | ரூ. 10,000/- |
| LTC | ரூ. 125/- | ரூ. 5,000/- |

### குறுகியகாலச் சிட்டுகள்

20 மாதங்கள் — 20 அங்கத்தினர்கள்

மாதம் ரூ. 30/- முதல் ரூ. 500/- வரை சந்தா

25 மாதங்கள் — 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | ரூ. 5,000/- | D | ரூ. 25/- | ரூ. 625/- |
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |

சேரும் குரூப்பை விவரித்து எழுதவும்
கிளைகள்: புது டில்லி - பம்பாய் - பெங்களூர் - கல்கத்தா - கோயமுத்தூர்

ஸ்தாபிதம்: 1947

30 YEARS

எங்கள் சேவை உங்களுக்குத் தேவை

கல்கி
1976
செப்டம்பர் 26
நள ௵
புரட்டாசி 10

○

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

## போடு புதிர்!

ஒரு மனிதன் சிறையில் அடைபட்டிருக்கிறான். சிறையிலிருந்து இரண்டு வழிகள் செல்லுகின்றன. ஒன்று தூக்கு மேடைக்குச் செல்கிறது; மற்றொன்று சிறைக்கு வெளியே செல்லும் வழி. அங்கு இரு காவலாளிகள் உள்ளனர். ஒருவன் எப்போதும் பொய்யே பேசுவான்; மற்றவன் எப்பொழுதும் உண்மையே பேசுவான். ஆனால் யார் உண்மை பேசுபவன், யார் பொய் பேசுபவன் எனக் கைதிக்குத் தெரியாது. இருவரில் யாரோ ஒருவனிடம் ஒரே ஒரு கேள்வி கேட்டுக் கைதி தப்பிக்க வேண்டுமானால், கைதி என்ன கேள்வி கேட்டுச் சரியான வழியைக் கண்டு பிடிப்பான்?

- வைதேகி பார்த்தசாரதி

பதில்: இரு காவலாளிகளில் எவரிடமும் ஒரே பதில் வரும்படியான கேள்வியைக் கைதி கேட்பான்: அதாவது யாராவது ஒருவனிடம், "இங்கிருந்து தூக்கு மேடைக்குப் போகும் வழி எது என்று இன்னொரு காவலாளியிடம் நான் கேட்டால் அவன் என்ன பதில் சொல்வான்?" எனக் கேட்பான். இவன் கேள்வியைப் பொய்யனிடம் கேட்டால், அவன் வெளி வழியைக் காட்டுவான். ஏனெனில் பொய்யன் உண்மைக்குப் புறம்பாகவே கூறுவானல்லவா? அதே போல் கேள்வியை உண்மை பேசுபவனிடம் கேட்டால் அவனும் வெளி வழியையே காட்டுவான். ஏனெனில், பொய்யன் தூக்கு மேடைக்குப் பதில் வெளி வழியையே காட்டுவானல்லவா? இருவரும் வெளி வழியையே காட்டுவதால், அவ்வழியே சென்று கைதி தப்பிப்பான்!

# கருத்து மழை!

ஏந்தக் கட்சியின் ஆட்சியாயினும் சரி, எத்தகைய ஆட்சியாயினும் சரி, நாட்டின் ஒரு பகுதியில் வறட்சி என்றால் நிவாரணப் பணியாற்ற வேண்டியது அரசின் கடமையாகிறது. எனவே, தமிழகத்தில் நடைபெறும் வறட்சி நிவாரணப் பணி செவ்வனே நடக்கிறதா என்று பார்த்துப் போக வந்த பிரதமருக்கு 'அதற்காக விசேஷமான நன்றி ஏதும் கூறத் தேவையில்லை. ஆனால் வந்த இடத்தில், கிடைத்த சந்தர்ப்பத்தில் கருத்து மழை பெய்து நமது சிந்தனை வறண்டு விடாமல் வளப்படுத்தி யிருக்கிறாரே, அதற்குப் பேஷாக அவருக்கு நன்றி சொல்லலாம். பிரதமர் தெரிவித்துள்ள கருத்துக்களில் முக்கியமான சில:

■ தேசத்தைத் துண்டாடுவது போன்ற பிரிவினைக் கருத்துக்களைப் பொறுத்துக் கொள்ளவே முடியாது. 'பிரிவினைவாதிகள் அல்ல' என்று சொல்லிக் கொண்டே சிலர் அதனைப் பிரசாரம் செய்கிறார்கள். இதனை அனுமதிக்க முடியாது.

■ இந்தப் பக்கம் நான் வரும்போது வழியில் மழை பெய்தது. வேறு சில இடங்களில் மழை மேகங்கள் தென்பட்டன. நன்றாக மழை பெய்ய வேண்டும் என்று நான் பிரார்த்திக்கிறேன்.

■ மக்களின் உடனடியான தேவைகளை மட்டும் கவனித்தால் போதாது. எதிர்காலத் தேவைகள் பற்றிய தீர்க்கதரிசன நோக்கு தலைவர்களுக்கு வேண்டும்.

■ தமிழகத்தில் கோஷங்கள் மோகம் நிறைய இருக்கிறது. கோஷங்கள் அவசியப் பணிகளிலிருந்து மக்களின் கவனத்தைத் திசை திருப்பி விடும். அவற்றால் பயன் இல்லை.

■ மாநில சுயாட்சி கோஷம் ஒரு மாயை. விவசாயம், மின்சாரம், நீர்ப்பாசனம், ஆரோக்கியம், கல்வி முதலிய பல அம்சங்கள் நாடு முழுவதற்கும் பொதுவானவை. இவற்றில் மத்திய அரசுக்கு அபிப்பிராயமும் அதிகாரமும் இருக்க வேண்டும். தண்ணீருக்காகவும், மின்சாரத்துக்காகவும் பல உணவுப் பொருள்களுக்காகவும் மற்ற மாநிலங்களை எதிர்பார்த்து நிற்கும்போதே மாநில சுயாட்சி கோஷமும் எழுப்புவது எவ்வளவு அபத்தம்! சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபடாததால் தேசிய உணர்வைப் பெறாத ஒரு கட்சியின் தலைமைதான் இத்தகைய கோஷத்தை எழுப்ப முடியும். அவர்கள்தான் மொழி, ஜாதி அடிப்படையிலும் உணர்ச்சிகளைத் தூண்டி விடுவார்கள். இதற்கு இடம் அளிக்கக் கூடாது.

■ பண வீக்கத்தைக் கட்டுப்படுத்துவதில் நாம் கணிசமான முன்னேற்றம் அடைந்திருக்கிறோம். என்றாலும் அந்த விஷ நாகம் மீண்டும் தலைதூக்கப் பார்க்கிறது. எச்சரிக்கை தேவை.

■ தொழில் துறையில் வேலைநிறுத்தம் இல்லாததால் உற்பத்தி அதிகரித்துத் தேசப் பொருளாதாரம் ரிஸர்வ் பாங்கின் பாராட்டை மட்டுமின்றி, உலக பாங்கின் பாராட்டையும் பெற்றிருக்கிறது. இந்த நிலையில் மேலும் அபிவிருத்தி காண உழைப்போம்.

■ இயக்கங்கள், வன்முறைகள் முதலியன பிரச்னைகளைத் தீர்க்க உதவா; பிரச்னைகளை அதிகரிக்கவே செய்யும் என்பதை மக்கள் இன்று உணர்ந்து விட்டார்கள்.

■ ஆணும் பெண்ணும் ஒரே வேலையைச் செய்யுமிடத்துப் பெண்ணுக்குக் குறைவாகக் கூலி கொடுப்பது தகாது. ஆணுக்குச் சமதையான ஊதியத்தைப் பெண் பெற வேண்டும்.

■ மத்திய அரசு எந்த மொழியையும் மாநிலங்கள் மீது திணிக்காது. பிரதேச மொழிக்கு முக்கியத்துவம் தருவதே மத்திய அரசின் கொள்கை. தமிழின் தொன்மையும் பெருமையும் உலகம் அறிந்த ஒன்று. அதற்கு ஆபத்து வந்து விட்டதாக அலறுவது மோசடி வேலை.

■ பலமான மத்திய அரசு இருந்தாலே எல்லா மாநிலங்களும் சமமான முறை

கல்கி
மலர் 36
இதழ் 9



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

யில் முன்னேற அதனால் உதவ முடியும்.

■ ஒவ்வொரு ராஜ்ய அரசும் தனது தேவைகளையே எண்ணிப் பார்த்துக் கொண்டிருக்கக் கூடாது. நீர்ப்பாசனம், விவசாயம், மின்சாரம் போன்ற அம்சங்களைத் தேசிய நோக்குடன் அணுக வேண்டும்.

■ இந்தாண்டுத் திட்டத்தில் பாக்கியுள்ள இரண்டு ஆண்டுகளிலும் அரசு, மின் உற்பத்தி, நீர்ப்பாசனம் ஆகியவற்றிலேயே கவனம் செலுத்தும்.

■ வேலைகளில் ஏற்றத்தாழ்வு என்பது கிடையாது. குடும்பப் பொறுப்பைக் கவனிக்கும் பெண்மணி உத்தியோகத்துக்குப் போகும் நங்கையைப் பார்த்து வெட்கப்படத் தேவை இல்லை. குடும்பத்தை நன்முக நடத்துவதே தேசப்பணிதான். குடும்பத்தின் வளமே தேசத்தின் வளம். சமூகப் பணியாற்றவோ அல்லது அரசியல் தலைமை ஏற்கவோ முற்படும் ஒரு பெண், குடும்பப் பொறுப்பை உதறிவிடத் தேவையில்லை. இரண்டையும் சிறப்பாகக் கவனிக்கத் தெரிந்து கொள்ள வேண்டும். எல்லாப் பெண்களுமே தம்மால் இயன்ற அளவில் சமூகப் பணியாற்றலாம். குழந்தை வளர்ப்பு, ஆரோக்கியம் பேணல், சுத்தமாக இருப்பது போன்றவற்றை, இவற்றை அறியாத பாமரருக்குச் சொல்லிக் கொடுப்பதே பெரிய சமூக சேவை.

■ ஏழைமையை முழுமையாக ஒழித்து விடுவது என்பது யாராலும் முடியாத காரியம். மக்கள் சுயச் சார்புடன் உழைத்துச் சம்பாதித்துக் கூடியவரையில் ஏழைமையைக் குறைத்துக் கொள்வது ஒன்றே வழி. இதற்கு உதவுபடியாகவே அரசின் திட்டங்களும் கொள்கைகளும் அமைய வேண்டும்.

■ ஒற்றுமையும் ஒழுக்கமுமே பிரச்னைகளை வென்று தேசத்தை முன்னேற்ற மக்களுக்கு உதவும்.

---

# அரங்கேற்றங்கள்

## குமாரி மஞ்சுளா



குமாரி மஞ்சுளா ஸ்விட்ஜர்லாந்தில் உள்ள ஜினிவா நகரில் தம் பெற்றோர்களாகிய ஸ்ரீமதி கமலா நரசிம்மன், ஸ்ரீ வி. நரசிம்மன் ஆகியவர்களுடன் இருக்கிறார். படித்துக் கொண்டே பரதமும் பயின்று வருகிறார். குமாரி மஞ்சுளாவுக்குப் பயிற்சி அளிக்கும் நடன ஆசிரியை ஸ்ரீமதி ராஜாமணி குச்சிபுடி, பரதம், கதகளி ஆகிய பல்வேறு நடனக் கலைகளில் தேர்ந்தவர். ஆசியா, ஐரோப்பா எங்கும் சென்று இவ்வருங் கலைத் திறனைப் பரப்பும் பணியைச் செய்து வந்திருக்கிறார். இப்பொழுது இவர் ஆம்ஸ்டர்டாமில் பரதநாட்டியப் பயிற்சிப் பள்ளி நடத்தி வருகிறார். அந்தப் பயிற்சி நிலையத்தில் நடனம் பயிலும் பல நாட்டு மாணவிகளுள் குமாரி மஞ்சுளாவும் ஒருவர். சமீபத்தில் குமாரி மஞ்சுளா சென்னை வந்திருந்தபோது பாரதீய வித்யா பவனத்தில் அரங்கேறினார்.

பரதக் கலையில் வர்ணம் மிகவும் அபூர்வமானது; நிருத்தியத்தின் விசேஷத் தன்மையையும், அபிநயக் கலையின் விரிவான விந்நியாசத்தையும் எடுத்துக் காட்டுவது. இந்நிகழ்ச்சியில் வர்ணம் சங்கராபரணத்தில் அமைக்கப்பட்டிருந்தது. தஞ்சையில் கோயில் கொண்டிருக்கும் பிரகதீசுவரப் பெருமானையே காதலிக்கிறாள் ஒரு பெண். அவ்வபலைப் பெண்ணின் இதய தாபத்தைக் குமாரி மஞ்சுளா அருமையாக அபிநயம் பண்ணிக் காட்டினார்.

ஸ்ரீமதி முத்துலட்சுமி சிறப்பாகப் பதங்கள் பாடினார்.

பாவம், லய சுத்தம் இரண்டும் மஞ்சுளாவுக்குக் கைவந்த கலையாக இருக்கின்றன. -காந்தன்


நீக்ரோ மக்கள்
இதோ! இதோ! இங்கேவா! கடிக்காதே! இதோ பார் ரொட்டி!
கிஸ்ஸிங்கர்
சமரசம்
தென் ஆப்பிரிக்க அரசு


பிரிவினையை எதிர்ப்பதில் நாம் பின்தங்கியவர் அல்லர்!
சொல்வதைப் பச்சைக் குத்திக் கொண்டால் தான் நம்புவோம்!


கோஷ்டி மனப்பான்மை
கோஷ்டி மனப்பான்மை
கோஷ்டி மனப்பான்மை
கோஷ்டி மனப்பான்மை
தமிழ்நாடு காங்கிரஸ்
காங்கிரசில் கோஷ்டி மனப்பான்மை கூடாது! — பிரதமர் அறிவுரை!

படுக்கை வேளையில் பல் துலக்க நீங்கள்
மறந்திடும் ஒவ்வொரு நேரமும்...



# உலகமெல்லாம் பரவிப் பெருகியுள்ள நோயால் பீடிக்கப்படும் அபாயத்துக்கு உள்ளாகிறீர்கள்!

படுக்கை வேளையில் நீங்கள் பல் துலக்கத் தவறும்போது, பற்களைச் சிதைக்கும் கிருமிகள், இரவு நேரத்தில் உங்கள் வாயில் தங்கும் உணவுத் துகள்கள் மூலம் வளர்ச்சி அடைகின்றன. இதனால் நூற்றுக்கு 95 பேரைப் பாதித்து, வலிதரும் சொத்தையாக மாறி, அவதி தரும் பற்சிதைவு நோய் பீடிக்கிறது.

## பினைகா ஃப்ளோரைட் பற்சிதைவுக்கு எதிராக நீடித்த பாதுகாப்பளிக்கிறது

பற்சிதைவை 50 சதவிகிதம் வரை ஃப்ளோரைட் குறைக்கிறது என விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஆகவே தவறாமல் பினைகா ஃப்ளோரைடினால், நாள்தோறும் காலையிலும், மீண்டும் படுக்கை வேளையிலும் பல் துலக்குங்கள். இதன் தனிப்பட்ட, நீடித்து நிற்கும் ஆற்றல், இரவு பூராவும் உங்கள் வாயைச் சுத்தமாக வைத்திருக்கிறது. பற்களைச் சிதைக்கும் கிருமிகளின் வளர்ச்சியையும் வலிதரும் சொத்தையையும் தடுக்கிறது.




**பல்லுக்கு உறுதி,
பற்சிதைவுக்கு எதிரி—**

# பினைகா ஃப்ளோரைட்

U-BF/28/75 Tam

# ஜீவகாருண்யம்

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி
காமகோடி சங்கராசாரிய
சுவாமிகள்



தஞ்சாவூர் ஜில்லாவில் மாத்திரம் இரண்டாயிரம் சங்கங்கள் போல் நிறுவி, ஒவ்வொன்றுக்கும் ஒரு முத்ராதிகாரியையும், உப முத்ராதிகாரியையும் தொண்டர்களையும் நியமனம் பண்ணியிருந்தோம். தாலுகா கமிட்டி, கோட்டகக் கமிட்டி, கிராமச் சங்கம் என்று இதை மூன்றாகப் பிரித்திருந்தோம். (நாலு கிராமம் சேர்ந்து ஒரு கோஷ்டம், அல்லது கோட்டகம் என்று வைத்திருந்தோம்.) பட்டணங்களில் தெருவுக்கு ஒரு முத்ராதிகாரி கூடப் போட்டோம். அநேகமாகத் தஞ்சாவூர் ஜில்லா கிராமங்களில் எல்லாம் மடத்துக்கென்றே பட்டய மான்யம் என்று ஒரு துண்டு நிலம் இருக்கும். அவற்றின் வருமானத்தையெல்லாம் முத்ராதிகாரிகளிடமே ஒப்படைத்து இந்த ஜீவாத்ம கைங்கரிய தர்மங்களைப் பண்ணச் செய்தது. சுமார் 5000 தொண்டர்கள் சேர்ந்து, ரொம்ப ஈடுபாட்டோடு பணிகள் செய்து வந்தார்கள். சூரியோதயத்திலிருந்து சூரியாஸ்தமனம் வரை ஊர் ஜனங்கள் எல்லாரும் ஏக மனஸாக பகவந்நாமாவைச் சொல்லிக் கொண்டு குளம் வெட்டியது இப்போதுகூடக் கண் முன்னால் நிற்கிறது.

ஒவ்வொரு கிராமத்திலும் இருக்கிறவர்கள் ஒன்று சேர்ந்தது மட்டுமில்லை. நாலு நாலு கிராம ஜனங்களாகச் சேர்ந்து ஒரு வருஷம் ஒரு கிராமத்தில் குளம் வெட்ட வேண்டும், இருக்கிற குளத்தைத் தூர் வார வேண்டும் ; அடுத்த வருஷம் இவர்கள் அந்த நாலில் இன்னொரு கிராமத்தில் இந்தப் பணியைச் செய்ய வேண்டும் ; அதற்கடுத்த வருஷம் மூன்றாவது கிராமத்தில்; அதற்கும் அடுத்த வருஷத்தில் நாலாவது கிராமத்தில் பண்ண வேண்டும் என்று வைத்ததால் ஒவ்வொரு கோட்டக ஜனங்களுக்குள்ளேயும் ஒற்றுமை, ஒத்துழைப்பு உண்டானதோடு, அது தாற்காலிகமாய் இருந்து பிசுபிசுத்து விடாமல், நாலு வருஷமாவது உயிரோடு, சக்தியோடு இருந்து வந்தது. தஞ்சாவூர் ஜில்லாவில் நாலு, ஐந்து மாசம் ஜலம் இருக்காததால் 'காதம்' என்கிற இந்தக் குளம் வெட்டுகிற பணிக்கு நிறைய அவசியம் உண்டு. சேரியிலும் வெட்ட வேண்டும். இன்னம் ஜனங்களுக்கு என்றே இல்லாமல் ஆடு மாடுகளுக்காகவும் ஊருக்கு வெளியில் மேய்ச்சல் பூமியில் செய்ய வேண்டும் என்றெல்லாம் ஏற்பாடு பண்ணி அப்படியே நடந்து வந்தது. வெயிலில் கஷ்டப்படுகிற வாயில்லா ஜீவன்களுக்குத் தண்ணீர் கைங்கரியம் செய்வது உத்தமமான தர்மம்.

கோனேரி ராஜபுரத்தில் ஒரு பிராம்மண குடும்பம். அவர்கள் எங்கே குளம் வெட்டினாலும் அதற்குப் பாதிப் பணம் கொடுப்பார்கள். ஆனால் ஒரு கண்டிஷன் சொல்வார்கள். அதாவது, குளத்துக்கு ஒரு பக்கம் படித்துறை கட்டாமல், நிலத்தையே ஜல மட்டம் வரை சரித்துவிட வேண்டும் என்பார்கள். ஏனென்றால், ஆடுமாடுகளுக்குப் படியில் சௌகரியமாக இறங்கி வந்து நின்று ஜலம் குடிக்கத் தெரியாது.

பட்டுக்கோட்டை தாலுகா தவிர ஜில்லா முழுக்க இப்படி நிறைய செய்தோம். பட்டுக்கோட்டையில் ஒவ்வொரு வீடுமே ஒரு காடாக இருக்கும். இடுப்பளவு வெட்டினாலே ஜலமும் வந்து விடும். ஒரு பண்ணையார் வீடு என்றால் பண்ணையாள் வீடு உள்பட எல்லாம் அந்த வேலிக்குள்ளேயே இருக்கும். அதனால் அவனவன் மாட்டுக்கு ஜலம் உள்ளேயே கிடைக்கும். இதனால் அங்கே மட்டும் 'காத'த் திருப்பணி செய்யாமல் எல்லோருமாகச் சேர்ந்து ரோடு போட்டார்கள்.

பிற்பாடு சமூகத்துக்கு ஒரு நன்மை கிடைப்பது; பிற்பாடு இந்த மாதிரி உழைப்பே ஒருத்தனுக்குச் சித்தசுத்தி தருவது எல்லாவற்றுக்கும் மேலாக, அப்போதே இம்மாதிரி காரியங்கள் பல ஜனங்களை ஜாதி, 'ஸ்டேடஸ்' சண்டைகளில்லாமல் ஒரு குடும்பமாகச் சேர்த்து வைத்ததைப் பார்த்ததிலிருந்து தனித் தனியாகப் பரோபகாரம் செய்வதை

**[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]**

விடப் பலர் சேர்ந்து சங்கமாகச் செய்வது ரொம்ப விசேஷமானது என்று தெரிந்தது.

பலபேர் சேர வேண்டும் என்பதற்காக இதை ஒரு அசோஸியேஷன் என்று சொல்லி ரிஜிஸ்டர் பண்ணி, சேர்மன், செகரெட்டரி, கவர்னிங் பாடி அது இது என்று சொல்லிக் கொண்டு, 'ஸ்தானங்கள்', அதற்காக சண்டை போட்டி என்று ஆக்கிவிடக் கூடாது. பரோபகாரத்தின் பெரிய பலனை அகம்பாவ நாசமே இதனால் அடிபட்டுப் போய்விடும். அதனால் இதிலே ''ஆபீஸ்'' எதையும் உள்ளே விடக் கூடாது.

வார வழிபாட்டுச் சங்கம் என்று ஊருக்கு ஊர் இருக்க வேண்டும் என்று நான் ஓயாமல் சொல்லி வருவது உங்களுக்குத் தெரிந்திருக்கும். வாரத்தில் ஒரு நாள் ஜனங்களை யெல்லாம் ஒன்றுசேர்த்துக் கோயிலில் வழிபாடு நடத்த வேண்டும் என்பதுதான் அதன் நோக்கம். இதர மதஸ்தர்கள் அத்தனைபேரும் இதை யாரும் சொல்லாமலே தாங்களாகச் செய்து வருகிறார்கள். இதன் பிரத்தியட்ச சக்தியால்தான் அவர்களுக்குப் புது சுதந்திர தேசமே முதற்கொண்டு கிடைக்கிறது; நமக்கோ லோகம் முழுக்க, ஏற்கனவே இருந்த கௌரவமும் நாளுக்கு நாள் குறைந்து கொண்டிருக்கிறது. நம் ஜனங்கள் எல்லோரும் வாரத்தில் ஒரு நாளாவது ஒன்றுசேர்ந்து தங்கள் கோணு மாணுவை யெல்லாம் விட்டுவிட்டுப் பகவானிடம் கொஞ்சம் மனதைக் கரைத்தால்தான் இந்தத் தேசத்துக்கு ஏதாவது நல்லது பிறக்க முடியும் என்றுதான் வார வழிபாட்டுச் சங்கம் நிறுவச் சொல்லி அநேக இடங்களில் ஆரம்பித்தும் இருக்கிறார்கள். இவர்களே இந்தப் பரோபகார, ஜீவாத்ம கைங்கரியப் பணிகளையும் எடுத்து நடத்த வேண்டும். தனி ஆர்கனைஸேஷன் எதுவும் வேண்டாம்.

'வாரத்தில் ஒரு நாள் கூட்டு வழிபாடு, வாரத்தில் ஒரு நாள் பொதுப் பணி என்றால் எப்படி முடியும்? ஒரு நாள்தானே 'லீவ்' இருக்கிறது?' என்று கேட்பீர்கள். அந்த ஒரு நாளிலேயே நான் இரண்டையும் சேர்த்துச் செய்யச் சொல்கிறேன். தெய்வப் பணி, சமூகப் பணி இரண்டையும் ஞாயிற்றுக் கிழமைதோறும் செய்ய வேண்டும்.

கோவில் வாசலில் எல்லா ஜனங்களும் சேர்ந்து வழிபட்டு, அத்தனை பேரும் அந்த ஒரே பராசக்தியின் குழந்தைகளாகச் சேர்ந்து பகவந் நாமத்துடனேயே கோவிலைப் பிரதக்ஷிணம் பண்ணிக் கொண்டு போய்க் குளம் வெட்டுவதையோ, ரோடு போடுவதையோ, நந்தவனம் வளர்ப்பதையோ செய்ய வேண்டும். வேலை யெல்லாம் முடிந்த பின்னும் கோவிலுக்கே திரும்பி வந்து, ''உன் கிருபையால் இன்றைக்குக் கொஞ்சம் பாபத்தைக் கழுவிக்கொள்ள முடிந்தது; சரீரம் எடுத்ததற்குப் பயனாக ஓர் உபகாரம் பண்ண முடிந்தது'' என்று நமஸ்காரம் செய்ய வேண்டும். கொஞ்சம் பஜனை — ஒரு பத்து நிமிஷம் இருந்தால் கூடப் போதும் — கொஞ்சம் உபந்நியாசம் எல்லாம் நடத்தி எல்லாரும் கலைய வேண்டும். அறுபத்துமூவர் அல்லது ஆழ்வாராதிகள் அல்லது பக்த விஜயத்தில் வரும் மகான்கள் இவர்களைப் பற்றிய உபந்யாசமாக இருந்தால் நம் மாதிரி மனிதர்களாக இருந்தவர்களே எப்படியெல்லாம் தியாகத்திலும், பிரேமையிலும் தெய்வமாக உயர்ந்திருக்கிறார்கள் என்று மனதில் ஆழப் பதியும்.

செலவுக்கு என்ன செய்வதென்றால், பணக்காரனைத்தான் நம்பிக் கொண்டிருப்பது என்றில்லாமல், அவனவனும் ஒரு காலணாவாவது கொடுக்க வேண்டும். பணக்காரனும் சரீரத்தால் உழைக்க வேண்டும்; ஏழையும் திரவியத்தால் துளி உதவி பண்ண வேண்டும். இதுதான் நிஜமான தியாகம். பணக்காரனைப் பணம் கேட்கவே கூடாது என்று எனக்கு அபிப்பிராயம். அதற்குக் காரணம் சொல்கிறேன். (தொடரும்)

# ஃபின்லேயின் நாகரீக உடைக் காட்சி

640
ரகங்களில்
4 புதிய
தோற்றங்கள்

ஃபின்லே துணிகளை அணிந்து எடுப்பாக விளங்குங்கள்.
அணிவதற்கு எத்தனையோ நேர்த்தியான ரகங்கள்: மதிப்பு
மிக்க போலியெஸ்டர்கள். பார்வைக்கு அழகான
பாப்ளின்கள். மென்மை கொஞ்சும் காட்டன்கள்.
கவர்ச்சியான கேம்ப்ரிக்குகள். லாவண்யமான லான்கள்.

நீங்கள் மகிழ்வுடன் அணிந்து, மதிப்புடன் விளங்க,
பலவகையான ஃபின்லே துணிகளும் உண்டு: புடவைகள்
அணியுங்கள்; அல்லது ஆடவர் துணிவகை அணியுங்கள்.
நமது நாகரீக துணி ரகங்களைக் கண்டு, தேர்ந்தெடுங்கள்.



**Finlay's**

ஃபின்லே மில்ஸ் லிட்./
கோல்ட் மோஹர் மில்ஸ் லிட்.

ASP-FM-49A

# புது உலகம் கண்டேன்!





○ லண்டன் நகரத் தோற்றமும் அரசியின் காவல் படையின் 'பாண்டு'த் தலைவரும்.

○ மாபெரும் வெஸ்ட்மினிஸ்டர் ஆலயம்.

## 12. லண்டன் தமிழர்கள்

போலந்திலிருந்து பேர்லின் ஆம்ஸ்டர்டாம் வழியாக நான் லண்டன் போய்ச் சேர்ந்த போது, ஓர் ஐந்து நிமிஷத்துக்குக் குறையாமல் ஹீத்ரு விமான நிலையத்தின் எல்லா ஒலிபெருக்கிகளும், ''மிஸ்டர் நாராயண் பார்த்தசாரதி, இமிடியட்லி யூ ஆர் வாண்டட் பை தி இன்ஃபர்மேஷன் டெஸ்க்'' என்று தொடர்ந்து முழங்கி வரவேற்பளித்தன. என்னை வரவேற்பதற்காக மேனர் அவென்யூவில் உள்ள தம் வீட்டிலிருந்து காரில் புறப்பட்டிருந்த லண்டன் தமிழர் திரு அழகப்பன் உரிய நேரத்தில் ஹீத்ருவை அடைய முடியாமல் போக்குவரத்து நெரிசலில் சிக்கிக் கொண்டு நடு வழியில் இருந்து விமான நிலையத்துக்கு ஃபோன் செய்திருந்தார். ஹீத்ரு நிலையத்தின் தகவல் பிரிவைச் சேர்ந்த பெண்மணி அந்த அறிவிப்பைத்தான் அவ்வாறு முழக்கியிருந்தார். விரைந்து சென்று அந்தத் தகவல் பிரிவினர் தொடர்பு செய்து கொடுத்த டெலிஃபோனில் அழகப்பனோடு (லண்டன் தமிழ்ச் சங்க முன்னாள் தலைவர்) பேசினேன். '' நீங்கள் ஓர் அரை மணி நேரம் தயவுசெய்து விமான நிலைய லவுஞ்ஜிலேயே காத்திருங்கள். எப்படியும் வந்து விடுவேன். மாலை நேரமாக இருப்பதால் பயங்கரமான டிராஃபிக் ஜாம். காரே நகர் முடியவில்லை'' என்றார் அழகப்பன். இவ்வாறு நான் அவரிடம் பேசிக் கொண்டிருக்கும் போதே, '' என்ன ? சௌக்கியமாக வந்து சேர்ந்தீர்களா ?'' என்ற தமிழ் விசாரணையோடு பின்புறத்திலிருந்து என் தோள்பட்டையில் ஒரு கை தட்டிக்கொடுத்தது. திரும்பிப் பார்த்தால் மதுரை டாக்டர் சூரியநாராயணனின் இளைய புதல்வர் ஸ்ரீதரன் மலர்ந்த முகத்தோடு நின்று கொண்டிருந்தார்.

இப்படி லண்டனில் இறங்கியதுமே அடுத்தடுத்துத் தமிழ்க் குரல்களைக் கேட்க முடிந்தது. லண்டனிலும் சுற்றுப்புறங்களிலும் ஆயிரக்கணக்கான தமிழர்கள் வசிக்கிறார்கள். இலக்கிய கலாசாரச் சங்கங்கள், சமய வழிபாட்டு மன்றங்கள் தமிழர்களுக்கென்று தனித் தனியே இருக்கின்றன. இங்கிலாந்தின் பல பகுதிகளிலும் குறிப்பாக லண்டனிலும் உள்ள தமிழர்கள், இந்தியத் தமிழர்கள், இலங்கைத் தமிழர்கள், பர்மா, மலேயா, சிங்கப்பூர் தென்னாப்பிரிக்காவிலிருந்து பிரிட்டிஷ் பாஸ்போர்ட்டுடனே குடியேறிய தமிழர்கள் என்று பல பிரிவுகளில் வருகிறார்கள். சிலர் தெளிவாகத் தமிழ்ப் பெயரும், தமிழ்ப் பாரம்பரியமும் பெற்றிருந்தாலும் பல நூற்றாண்டுகளாக வெளிநாட்டில் வளர்ந்த குடும்பங்களில் பிறந்து உருவாகியதால் இன்று சரியாகத் தமிழ் பேசவும், எழுதவும் தெரியாதவர்களாக உள்ளனர். பாரிஸ் நகரில் உள்ள 'ஜாஸ்மின்' (Jasmine) என்ற மெட்ரோ நிலையத்தின் பிளாட்பாரத்தில் 'கிட்டார்' வாசித்துப் பணம் சம்பாதித்துக் கொண்டிருந்த ஓர் இளைஞரின் தோற்றம் முக அமைப்பைக் கவனித்துத் தமிழராக இருக்குமோ என்று அருகே நெருங்கி விசாரித்தபோது, ''என் பெயர் சொக்கப் பெருமான். மருஷியஸிலிருந்து படிக்க வந்திருக்கிறேன். என் முன்னோர்கள் பல தலைமுறைக்கு முன் தமிழ் நாட்டிலிருந்து மருஷியஸ் தீவுக்குக் குடியேறியவர்கள். இப்

போது எனக்குத் தமிழ் பேசத் தெரியாது. ஆங்கிலமும் பிரெஞ்சும் மட்டுமே தெரியும்'' என்று ஆங்கிலத்தில் பதில் கூறினார். அவர் பெயரைக் கேட்டதுமே ஆனந்த பரவசம் ஏற்பட்டது.

இவரைப் போல் தமிழ் தெரியாத ஆனால் நிச்சயமான தமிழ்ப் பாரம்பரியத்தை உடைய பல தமிழர்களை ஐரோப்பாவில் நிறையச் சந்திக்கலாம். ஆனால் லண்டனில் தமிழ் பேசத் தமிழில் சொற்பொழிவு செய்ய, பாரதி பாடல் முதல் தேவாரப் பாடல் வரை பாட முடிந்த பல்லாயிரம் தமிழர்கள் இருக்கிறார்கள். சில பகுதிகளில் பம்பாயில் மாதுங்காவில் இருப்பதைப் போலவோ, தில்லியில் கரோல்பாக்கில் இருப்பதைப் போலவோ உணர்கிற அளவுக்குத் தமிழ்க் குடும்பங்கள் லண்டனில் நிறைந்துள்ளன.

இந்தியாவில் பிரெஞ்சுப் பிரதேசங்களாக இருந்த பாண்டிச்சேரி, காரைக்கால் முதலியவற்றிலிருந்து பிரான்ஸில் குடியேறிய பலர் பஸ்கல், டொமினிக், ரோகோ என்பன போன்ற பிரெஞ்சுப் பெயர்களும், பூர்வீகத் தமிழ்ப் பாரம்பரியமுமாக வாழ்கின்றனர். பாரிஸில் உள்ள பல்கலைக் கழகங்களிலும், உயர்கல்வி நிலையங்களிலும் டஜன் கணக்கில் தமிழ் நாட்டு மாணவர்கள், பாண்டிச்சேரி காரைக்கால் இளைஞர்கள் கற்று வருகிறார்கள். இப்படியே ஹாலந்து, மேற்கு ஜெர்மனி முதலிய பல நாடுகளில் அங்கங்கே ஒருவர் இருவராகத் தமிழர்கள் இருக்கிறார்கள்.

இந்தப் பல்வேறு ஐரோப்பிய நாடுகளைச் சேர்ந்த தமிழர்களுக்கு எல்லாம் கேந்திரமான நகரம் லண்டன்தான். இவர்களில் பலர் முதலில் படிக்க வந்தபோதோ அல்லது திருமணமாகாமல் தனிக் கட்டையாக வேலைக்கு வந்தபோதோ லண்டனின் பிட்ஸ்ராய் சதுக்கத்தில் (Fitzrov Square) உள்ள இந்தியன் ஒய். எம். சி.ஏ.யில் ஏதாவது ஓர் அறையில் சில வாரங்கள், சில மாதங்கள் தங்கித்தான் தங்கள் ஐரோப்பியப் பிரவேசத்தைத் தொடங்கியிருப்பார்கள். இந்தியர்கள், தமிழர்கள் கலந்து பழகுமிடங்களில் முக்கியமானது இந்த இண்டியன் ஒய். எம்.ஸி. ஏ. அவ்வப்போது இங்கு தங்கியிருக்கும் தமிழர்கள் தமிழ்ப் புத்தாண்டு, பொங்கல், பாரதி, திருவள்ளுவர் விழாக்களைக் கொண்டாடுவதும் உண்டு.

ஆனால் இன்றைய லண்டன் தமிழர்கள் ஒய்.எம்.ஸி.ஏ.க்கு அப்பாலும் வியாபித்துப் பரவியிருக்கிறார்கள். இலங்கைத் தமிழர்கள் பெரும்பாலும் விம்பிள்டன் டூட்டிங் பிராட்வே பகுதிகளில் இருந்தாலும், அநேகமாக எல்லா இடங்களிலும் தமிழ்க் குடும்பங்கள் பரவியிருக்கின்றன. நகரிலிருந்து விலகியிருக்கும் ஈஸ்ட்ஹாம், பெரிவேல், டீல், செவன் ஸிஸ்டர்ஸ், ஸிட்கப் போன்ற பகுதிகளில்கூடத் தமிழர்கள் குடியிருக்கிறார்கள். லண்டன் நகரில் சீக்கியர்கள், குஜராத்திகள், சிந்திகளுக்கு அடுத்துத் தமிழர்களும் பெருவாரியினரான எண்ணிக்கையில் வருகிறார்கள்.

இன்றைய லண்டனில் இரண்டு தமிழ்ப் பத்திரிகைகள் மாத வெளியீடாக வந்துகொண்டிருக்கின்றன. இரண்டு முருகன் கோவில்கள்



## YOUR TEMPLE

### BRITTANIA HINDU (SHIVA) TEMPLE TRUST

பிரித்தானியா சைவக் கோவில் அறநிலையம் அமைக்கவிருக்கும் முருகன் கோவிலின் மாதிரித் தோற்றம்.

## நா. பார்த்தசாரதி

வழிபாடுகளை நடத்திக் கொண்டிருக்கின்றன. இந்தியக் கலாசார மையமாகப் பாரதிய வித்யாபவன் லண்டன் கிளை வேறு இயங்கி வருகிறது. லண்டன் தமிழ்ச் சங்கம், பிரித்தானிய சைவ மாமன்றம் போன்ற அமைப்புக்களும் இயங்கி வருகின்றன. இந்த வகையில் பார்க்கும்போது சில ஆண்டுகளுக்குமுன் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டைப் பாரிஸில் நடத்தியதைவிட லண்டனில் நடத்தியிருக்கலாமே என்றுகூடத் தோன்றியது.

இரண்டாவது உலகப் போருக்கு முன்பிருந்தே லண்டனில் வசிக்கும் தமிழர் ஒருவரிலிருந்து இங்கே அறிமுகத்தைத் தொடங்கலாம் என்று நினைக்கிறேன்.

வெம்பிளி ஹில் (Wemb'y Hill) பகுதியில் வசிக்கும் டாக்டர் சேகரிலிருந்துதான் இந்த அறிமுகத்தைத் தொடங்க வேண்டும். டாக்டர் சேகர், பழுத்த பழம். பல முறை இண்டியன் ஒய். எம். சி. ஏ.யிலும், தமிழ்ச் சங்கத்திலும் முக்கியமான பொறுப்புக்களை ஏற்றிருந்தவர். இவருடைய பெரு முயற்சியால் இவர் முன்னணியாளராக இருந்த போதுதான் லண்டன் தமிழ்ச் சங்கமே முறையாகப் பதிவு செய்யப்பட்டது. கடந்த ஐம்பதாண்டுகளுக்கும் மேலாகத் தமிழ்ச் சங்கத்தைப் போன்ற ஓர் அமைப்பு லண்டனில் இருந்தது என்றாலும் 1960ல்தான் அது முறையாகப் பதிவு செய்யப்பட்டிருக்கிறது.

பிரித்தானியா சைவக்கோவில் அறநிலையத்தில் திரு சபாபதிப் பிள்ளை முருகனுக்குத் தீபாராதனை காட்டுகிறார்.



"பத்தாயிரம் ரூபாய் கடன் கேட்கிறேயே! எதற்குக் கடன்?"

"நாலு வருஷத்துக்கு முன்னே, பக்கத்துத் தெரு பாங்கிலே ஐயாயிரம் ரூபாய் கடன் வாங்கியிருந்தேன். வட்டி பாக்கிக்காக நோட்டீஸ் அனுப்பியிருக்கிறார்கள். அந்தக்கடனை அடைக்கப் புதுக் கடன் தேவை."

இப்போது இந்தத் தமிழ்ச் சங்கத்தின் தலைவராகத் திரு ரூ. க. சுப்பிரமணியம் (கோவையைச் சேர்ந்தவர்) இருந்து வருகிறார். தீபாவளி விழா, கிறிஸ்துமஸ் விழா, வள்ளுவர் விழா, பாரதி விழா, தமிழ்ப் புத்தாண்டு விழா, பொங்கல் விழா ஆகியவற்றைக் கொண்டாடுவதுடன், நாடகங்கள், நடனங்கள், இசை நிகழ்ச்சிகளையும் சங்கம் ஏற்பாடு செய்கிறது. தாய்நாட்டிலிருந்து வரும் தமிழறிஞர்களுக்கு வரவேற்பு அளிக்கிறது.

சங்க உறுப்பினர்களின் மகிழ்வுச் சுற்றுலாவுக்கும் அவ்வப்போது ஏற்பாடு செய்கிறது. இத்தனை ஆயிரம் தமிழர்கள் வசிக்கும் லண்டனில் சங்கத்துக்கென ஒரு சிறிய இடமாவது சொந்தத்தில் கட்டிக்கொள்ள வேண்டும் என்ற லட்சியம் நீண்ட காலமாக இருந்துவருகிறது. சொந்த இடமில்லாததால் சங்கத்தின் சிறிய நூல் நிலையம் அவ்வப்போது பொருளாளராகத் தேர்ந்தெடுக்க பட வேண்டியவரின் வீட்டுக்குக் குடிபெயர்வது வழக்கமாக உள்ளது என்கிறார்கள்.

பாரதீய வித்யாபவன் லண்டன் கிளை நியூ ஆக்ஸ்ஃபோர்டு தெருவில் ஒரு குறுகலான மாடிக் கட்டடத்தில் அமைந்திருக்கிறது. மத்தூர் கிருஷ்ணமூர்த்தி என்ற கன்னடத் தமிழ் அறிஞர் இதன் பதிவாளராக இப்போது இருக்கிறார். லண்டன் வாழ் தமிழர்களுக்கு மட்டும் இன்றி அனைத்து இந்திய சமூகத்தாருக்கும் பயன்படுகிற கலாசார — சமய நிகழ்ச்சிகள் பல பாரதீய வித்யாபவனில் நடத்தப்படுகின்றன. நான் லண்டனில் இருந்தபோது பவனில் ஸ்ரீராமநவமி சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

கோலியர்ஸ்வுட் பகுதியில் வசிக்கும் ஈழத்து நண்பர் சிவா அவர்கள் 'திராவிடா டிரஸ்ட்' என்ற பெயரில் நடத்தும் ஒரு நிறுவனத்தின் சார்பில் ஆர்வம் உள்ள இளைஞர்களைத் திரட்டி ஆய்வுக் குழு (ஸ்டடி சர்க்கிள்) ஒன்றை நடத்தி வருகிறார். உலக வரலாறு, தத்துவம், கலைகள் பற்றி இந்தக் கருத்தாய்வுக் குழுவினர் வாரா வாரம் தங்களுக்குள் கலந்துரையாடி விவாதிக்கின்றனர். கட்டுரைகள்படித்து ஆராய்கின்றனர்.

இவை தவிரத் தமிழ்க் கடவுளாகிய முருகனுக்குக் கோயில் கட்டும் முயற்சியில் இரண்டு அமைப்புக்கள் முயன்று வருகின்றன. ஓர் அமைப்பு திரு எஸ். சபாபதிப் பிள்ளையின் தலைமையில் இயங்கி வரும் பிரித்தானிய சைவக் கோயில் அறநிலையம். மற்றோர் அமைப்பு திரு எல். மெய்யப்பன் தலைமையில் நடைபெறும் இலண்டன் முருகன் கோயில். முருகக் கடவுளுக்கு லண்டனில் கோயில் கட்டுவதே இரு அமைப்புக்களுக்கும் நோக்கம். கோயில் இன்னும் கட்டப்படவில்லை என்றாலும் இரு அமைப்புக்களின் சார்பிலும் முருக வழிபாடு நடக்கிறது. அடியார்களும் குழந்தைகளும் கூடுகிறார்கள். பாடுகிறார்கள். வணங்குகிறார்கள். வழிபடுகிறார்கள்.

பிரித்தானிய சைவக் கோயில் அறநிலையச் சார்பில் அவர்கள் தமிழ் நாட்டிலிருந்து தருவித்திருக்கும் திருச்செந்தூர் பாணி முருக விக்கிரகத்துக்கு நொட்டிங் பிராட்வேயிலுள்ள கேரட் லேனில் அபிஷேக ஆராதனைகள் நடக்கின்றன.

கொன்றையும் வில்வமும் கிடைக்காத குறையால் டெஃப்படில்ஸ் பூக்களால் அர்ச்சனை நடந்தது. சரவணப் பொய்கை நீர் அபிஷேகமும் தாமரைப் பூவும், லண்டன் முருகனுக்குக் கிடைக்கா விட்டாலும், சுத்தப்படுத்திய தேம்ஸ் நீரும் ஏறக்குறையப் பொன்னரளிப் பூவை ஒத்த டெஃப்படில்ஸ் (Daffodils) பூவும் கிடைக்கின்றன. பூஜை முடிவில் தேவாரம் முதலிய பக்திப் பாடல்களை எல்லாரும் சேர்ந்து இசைக்கின்றனர். அபிஷேக ஆராதனை அர்ச்சனைகளைத் திரு சபாபதிப் பிள்ளையே பயபக்தியோடு செய்கிறார்.

மற்றோர் அமைப்பாகிய லண்டன் முருகன் கோயிலின் வழிபாடு இப்போது ரஸ்ஸல் ஸ்குவேர் அருகே உள்ள கிரீகோரி கூடத்தில் நடக்கிறது. முன்பு பாரதீய வித்யாபவனில் நடைபெற்ற இவ்வழிபாடு, கூட்டம் அதிகமாக அதிகமாகப் பெரிய இடத்தை நாடி ரஸ்ஸல் ஸ்குவேருக்கு மாறியிருக்கிறது. இங்கே பூஜையை நடத்துபவர் இந்திய ஹைகமிஷனரான — திரு பி. கே. நேருவின் அந்தரங்கக் காரியதரிசி திரு ஸ. எஸ். கே. ராமன் ஆவார். பக்தி சிரத்தையோடு பூஜையைச் சாஸ்திரோக்தமாகச் செய்கிறார் இவர்.

இவ்விரண்டு முருகன் கோயிலுக்கும் தனித் தனியே நிதிகள் சேர்க்கப்பட்டு வருகின்றன. நிதி சேர்ப்பதற்கு என்றே திரைப்படம், இசை, நடன நிகழ்ச்சிகளும் நடத்தப்படுகின்றன. வழிபாட்டுக்கு வருகிறவர்களும் மனமுவந்து நன்கொடை அளித்து வருகிறார்கள். ஐந்நூறு பக்தர்கள் தலைக்கு இரண்டு பவுண்ட் விதம் இரண்டு ஆண்டுகளுக்கு அளிக்கும் திட்டம் ஒன்றைப் பிரித்தானிய சைவக் கோயில் அற நிலையத்தார் ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

குழந்தைகள் ஐந்து ஐந்து பென்னிகளாக உண்டியலில் சேர்த்து வழிபாட்டுக்கு வரும்போது கொண்டு வந்து தரும் ஐந்து பென்னித் திட்டம் என்பதை இலண்டன் முருகன் கோயில் ஏற்பாடு செய்திருக்கிறது.

இவற்றில் சபாபதிப் பிள்ளையின் கோயில் பணிக்கும் முந்திய அவரது தாய் ஸ்தாபனமான பிரித்தானிய சைவ மாமன்றம் மற்றொரு காரியத்தையும் செய்து வருகிறது.

தமிழ் முறைப்படி திருமணம், தமிழ் முறைப்படி நீத்தார் கிரியை முதலிய சடங்குகளை லண்டன் வாழ் தமிழர்களுக்குச் செய்து

# ஒரு விருந்தின் தனிச்சிறப்பு

பழ வகைகள்—ஒரு விருந்தின் முடிவில் அளிப்பது வழக்கம். பாரி மிட்டாய்களை விருந்தின் முடிவில் அளியுங்கள். அது விருந்திற்கே ஒரு தனிச் சிறப்பு அளிக்கும்.

விருந்தினர்க்களிக்கவே பாரியின் மிட்டாய் வகைகள்: சாக்லேட் எக்ளேர்கள், கோகனட் எக்ளேர்கள், பைன் ஆப்பிள் லிக்கர்கள், ஆரஞ்சு லிக்கர்கள், லாக்டோ பான் பான்கள் மற்றும் ஆரஞ்சு கேண்டிகள்.




**வாழ்வில் இனிமை விரைந்து**
**பரவிடவே-பாரீஸ்**

PRS/2145

பாரீஸ் கன்பெக்ஷனரி லிமிடெட்
சென்னை 600 001

வைக்கும் பணியைத் திரு சபாபதிப் பிள்ளை ஆற்றி வருகிறார். சபாபதிப் பிள்ளைக்குப் பின்னர் லண்டனில் குடியேறி யிருக்கும் மத்தூர் கிருஷ்ணமூர்த்தி வேத மந்திரங்கள், சாஸ்திரங்கள், யாகம் இவற்றை எல்லாம் வேத பூர்வமாகச் சொல்லி அங்குள்ள தமிழர்களுக்கு அவசியமான புரோகிதம் செய்து உதவி வருகிறார். சில சமயங்களில் திரு சபாபதிப் பிள்ளை தமிழ் முறைப்படி நடத்தும் திருமணத்திலேயே வேதமுறைப்படி ஓமம் மட்டும் வளர்க்க வேண்டும் என்று விரும்பி விடுவார்கள். அப்படி மண மேடைகளில் இரண்டு புரோகிதர்களுமே சந்தித்துக் கொள்ள நேரிட்டுவிடும். தமிழ் மறையும் வேதமும் அடுத்தடுத்து முழங்கும். இருவருமே 'சர்வீஸ் சார்ஜ்' என்று ஆங்கிலத்தில் சொல்லப்படும் தட்சிணைக்கு உரியவர்கள்.

திரு சபாபதிப்பிள்ளை மாணவர்களுக்குச் சட்டம் கற்பித்த பேராசிரியர் பதவியில் இருந்தவர். திரு மத்தூர் கிருஷ்ணமூர்த்தி, பாரதீய வித்யாபவன் லண்டன் கிளையைக் கவனித்துக் கொள்ளும் பெரும் பொறுப்பில் உள்ளவர். எனினும் இந்த இருவருமே அந்நிய தேசத்தில் இந்தியக் கலாசாரத்தைக் காக்க விரும்பும் மக்களுக்காகப் புரோகிதர் பணியையும்கூடச் சிரத்தையாக முன் நின்று செய்து வருகிறார்கள்.

பாரதீய வித்யாபவன் இருக்கும் அதே பகுதியின் மற்றொரு கோடியில் பரி ப்ளேஸ் (Bury Place) என்ற இடத்தில் ஹரே கிருஷ்ண இயக்கத்தினரின் கிருஷ்ணன் கோயில் இருக்கிறது. இவர்கள் கோயிலில் முழுக்க முழுக்க வெள்ளைக்காரர்களே எல்லாம் கவனித்தாலும் ஆகம முறைகள் அத்துபடியாயுள்ளன. கோலம் போடுவதிலிருந்து, மூக்கில் துணியைக் கட்டிக் கொண்டு நைவேத்தியத்தின் வாசனை அதை எடுத்து வருபவருக்குப் புலனாகிவிடாமல் எடுத்து வரும் அதிநுட்பமான திருமடைப்பள்ளி சம்பிரதாயம் வரை இந்த ஹரே கிருஷ்ண கோயிலில் கடைப்பிடிக்கப்படுகிறது. இந்த ஹரே கிருஷ்ண இயக்கத் தலைவர் ஆன பிரபுபாத பக்தி வேதாந்த சுவாமிகளின் தோற்றம் வானமாமலை ஜீயர் சுவாமிகளின் தோற்றத்தைப் போல் மேனியில் பன்னிரண்டு திருமண் காப்புக்களுடன் காட்சி அளிக்கிறது.

இவர்கள் ஆக்ஸ்போர்டு தெருவிலிருந்து ஹைட்பார்க் வரை தேர் இழுக்கவும், மிருதங்கம், ஆர்மோனியம், சுருதிப் பெட்டி சகிதம் பஜனை பாடவும் எந்தக் குளிரிலும் தயங்குவதில்லை. மற்றக் கோயில்களில் குளிரை அனுசரித்து ஷூ, ஸாக்ஸ் — கழற்றுவதை அதிகம் வற்புறுத்துவதில்லை. ஆனால் ஹரே கிருஷ்ணக்காரர்கள் அதிலும் கறாராக இருக்கிறார்கள். உள்ளே நுழையுமுன் கண்டிப்பாக இரண்டையும் கழற்றியே ஆகவேண்டும்.

இவர்கள் பஜனை — வீதிவலம் — என்று அக்கம்பக்கத்தாருக்கு இடையூறாக நிறையச் சத்தம் போடுகிறார்கள் என்று யாரோ அப்பகுதிக் கவுன்ஸிலில் புகார் செய்து கவுன்ஸில் அதிகாரிகள் பரி ப்ளேஸிலிருந்து இவர்களைக் காலி செய்யச் சொல்லி நோட்டீஸ் விட்டு விட்டார்களாம். நான் போயிருந்தபோது கவுன்ஸில் அதிகாரிகளின் அந்த நடவடிக்கையைக் கண்டித்துக் கோயில் முகப்பில் பெரிய போர்டு எழுதி வைத்திருந்தார்கள் இவர்கள்.

வெஸ்ட் மின்ஸ்டர் அபே, காண்டர்பரி போன்ற பெரிய ஆலயங்கள் உள்ள லண்டனிலும் சுற்றுப் புறங்களிலும் சிறிய அளவிலாவது முருகன் கோயில்களும் கிருஷ்ணன் கோயிலும் இருப்பதற்காகத் தமிழ் மக்கள் பெருமைப்படுகிறார்கள்.

பிரித்தானிய சைவ மாமன்றத் தலைவர் சபாபதிப் பிள்ளையின் புதல்வர் திரு சதானந்தன் அரும்பாடுபட்டு 'லண்டன் முரசு' என்று ஒரு மாத இதழைத் தமிழில் ஆறு ஆண்டுகளாகத் தொடர்ந்து அயராமல் நடத்தி வருகிறார்.

வி. சி. அப்பாசாமி, கி. வெங்கடசுப்பிரமணியன் என்ற இந்தியத் தமிழ் இளைஞர்கள் இருவரும் புதிதாக 'மலர்ச்சி' என்றொரு தமிழ் மாத இதழை லண்டனிலிருந்து நடத்தத் தொடங்கியிருக்கிறார்கள். லண்டனில் இவற்றைத் தமிழில் அச்சிட இயலாததால் அட்டையை மட்டும் வண்ணத் தாளில் அச்சிட்டு உள்ளே பக்கங்களைத் தமிழில் டைப் செய்து பிரதி எடுத்து வெளியிடுகிறார்கள். கையிலிருந்து பொருள் இழப்பு ஏற்பட்டாலும் லாப நோக்கம் எதுவும் இன்றித் தமிழ்த் தொண்டுக்காகவே இவர்கள் இந்தப் பத்திரிகைகளை லண்டனிலிருந்து நடத்துகிறார்கள்.

இந்தியா கிளப், இண்டியன் ஒய்.எம்.சி.ஏ. இவைகளின் உணவு விடுதிகளில் பணிபுரிகிறவர்களில் பலர் தமிழர்கள். இந்தியர்களையும் தமிழர்களையும் பார்த்தால் இவர்கள் உற்சாகத்தோடு முகமலர்ந்து பேச முன்வருகிறார்கள்.

பஸ்ஸிலோ, ஓடும் ட்யூப் ரயிலிலோ, தெரு முனையிலோ, ஓர் இந்திய ரெஸ்டாரெண்டிலோ சகஜமாக இந்தியர்களைத் தமிழர்களைச் சந்தித்துவிட முடிந்த நகரம் லண்டன். அவ்வளவு தமிழர்கள் இருக்கிறார்கள் அங்கே.

"தென்னிந்தியச் சிறப்பு உணவுகளான இட்டிலி, தோசை, அடை, வடை, சாம்பார், மசால்தோசை, தயிர் வடை முதலியவற்றை நாங்கள் சப்ளை செய்கிறோம்" என்று விளம்பரம் செய்யும் இரண்டொரு தென்னாட்டுச் சிற்றுண்டி உணவு விடுதிகளும் உட்படச் சுமார் ஐநூறுக்குமேற்பட்ட இந்திய உணவு விடுதிகளும் லண்டனில் இருக்கின்றன என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.

பி. பி.சி.யில் பணி புரியும் சங்கர் என்ற சங்கரமூர்த்தி, தென்னாப்பிரிக்காவிலிருந்து வந்துள்ள திரு படையாச்சி, 'கரடியார்' என்ற புனைபெயரில் பிரபலமாகியிருக்கும் சீதாராமகிருஷ்ணமூர்த்தி திரு சி. வேத நாராயணன், ஓய்வுபெற்ற ஆசிரியர் ஈழம் திரு வை. முத்துக்குமாரசாமி, மதுரை டாக்டர் சு. நாககப்பிரமணியம் ஆகிய சில பெயர்கள் லண்டன் தமிழர்களில் குறிப்பிட்டுச் சொல்லப்பட வேண்டியவை.

(தொடரும்)

---



ரமேஷ்: ராமர் செட் பொம்மையில் சீதைப் பொம்மை உடைந்து விட்டது. என்ன செய்யலாம்?

பாபு: 'கிஷ்கிந்தா காண்டம்' என்று ஒரு சீட்டு எழுதி ஒட்டி விடு.

— லலிதா செல்லப்பா

# பார்த்திபன் கனவு

அமரர் கல்கி

## அத்தியாயம் 3

## சதியாலோசனை

சற்று நேரத்துக்கெல்லாம் அருள்மொழித் தேவியும் இளவரசர் விக்கிரமனும் குடிசைக்குள் வந்து, ''சுவாமி!'' என்று சொல்லிச் சிவனடியாரின் பாதத்தில் வணங்கினார்கள். சிவனடியார் விக்கிரமனைத் தூக்கி எடுத்து அணைத்துக் கொண்டு ஆசீர்வதித்தார்.

ஆறு வருஷத்துக்குமுன் அறியாப் பாலகனாயிருந்த விக்கிரமன் இப்போது இளங்காளைப் பருவத்தை அடைந்து, ஆஜானுபாகுவாக விளங்கினான். அவன் முகத்தில் வீரக் களை திகழ்ந்தது. உள்ளத்தில் பொங்கிய ஆர்வத்தின் வேகம் கண்களில் அலையெறிந்தது. படபடவென்று பேசத் தொடங்கினான்: ''சுவாமி! நேற்றிரவு கனவில் என் தந்தை வந்தார். என்னை அழைத்துக் கொண்டு சிராப்பள்ளி மலைக்குப் போனார். அங்கே உச்சியில் பறந்து கொண்டிருந்த பல்லவர்களின் சிங்கக் கொடியைக் காட்டினார்.... சுவாமி! இனிமேல் என்னால் பொறுத்திருக்க முடியாது. நீங்கள் என்னை ஆசீர்வதிக்க வேண்டும்'' என்றான்.

''என்னுடைய ஆசீர்வாதம் உனக்கு எப்போதும் இருக்கிறது. விக்கிரமா! சரியான காலம் வரும் வரையில் காத்திருக்கும்படிதானே சொன்னேன்? இப்போது காலம் வந்துவிட்டது. நீ என்ன செய்ய உத்தேசித்திருக்கிறாய், சொல்லு. வெறும் பதட்டத்தினால் மட்டும் காரியம் ஒன்றும் ஆகி விடாது. தீர யோசித்து ஒரு காரியத்தில் இறங்க வேண்டும். உன் தந்தை உனக்குக் கொடுத்துவிட்டுப் போன குறள் நூலில் தெய்வப் புலவர் என்ன சொல்லியிருக்கிறார்?

'எண்ணித் துணிக கருமம்;
துணிந்தபின்
எண்ணுவம் என்ப(து) இழுக்கு'

— இதை நீ எப்போதும் ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும்.''

''ஆம், சுவாமி! எண்ணித்தான் துணிந்திருக்கிறேன். வரப் போகும் புரட்டாசிப் பௌர்ணமியன்று சிராப்பள்ளி மலை மீது பறக்கும் பல்லவர் கொடியை எடுத்தெறிந்துவிட்டு அங்கே புலிக் கொடியைப் பறக்கவிடப் போகிறேன். யார் என்ன சொன்ன போதிலும் இந்தத் தீர்மானத்தை நான் மாற்றிக் கொள்ளப் போவதில்லை.''

''மிக்க சந்தோஷம், விக்கிரமா! உன் தீர்மானத்தை மாற்றிக் கொள்ளும்படி நானும் சொல்லப் போவதில்லை. இந்த நாள் எப்போது வரப் போகிறதென்றுதான் நான் காத்துக் கொண்டிருந்தேன். ஆனால், உன் தீர்மானத்தைக் காரியத்தில் நிறைவேற்ற என்ன ஏற்பாடு செய்திருக்கிறாய்? அதைத் தெரிந்து கொள்ள மட்டும் விரும்புகிறேன். புலிக் கொடியைப் பறக்க விட்டு விட்டால் போதுமா? அதைக் காத்து நிற்கப் படைகள் வேண்டாமா? பல்லவ தளபதி அச்சுதவர்மன் சும்மா பார்த்துக் கொண்டிருப்பானா?....''

''சுவாமி! அந்தக் கவலை தங்களுக்கு வேண்டவே வேண்டாம். சோழநாட்டு மக்கள் எல்லாரும் சித்தமாயிருக்கிறார்கள். பொன்னனைக் கேளுங்கள், சொல்லுவான். புரட்டாசிப் பௌர்ணமியில் வீரர்கள் பலர் உறையூரில் வந்து கூடுவார்கள். புலிக் கொடி உயர்ந்ததும், அவர்கள் என்னுடைய

படையில் பகிரங்கமாய்ச் சேர்ந்துவிடுவார்கள். உறையூரில் உள்ள பல்லவ சைன்யத்தைச் சின்னாபின்னம் செய்து அச்சுதவர்மனையும் சிறைப்படுத்திவிடுவோம்...."

"இந்த அபாயகரமான முயற்சியில் உனக்கு யார் ஒத்தாசை செய்கிறார்கள்? யார் உனக்காகப் படை திரட்டுகிறார்கள்? நீயோ வசந்த மாளிகையைவிட்டு வெளியே போவதே கிடையாதே...."

"என் சித்தப்பா மாரப்ப பூபதிதான் எல்லா ஏற்பாடுகளும் செய்கிறார். அவர் இரகசியமாக ஒரு பெரிய படை திரட்டி வைத்திருக்கிறார்..."

மாரப்ப பூபதி என்றதுமே சிவனடியாரின் முகம் கறுத்தது. அவர் விக்கிரமனை நடுவில் நிறுத்தி, "யார்? மாரப்ப பூபதியா இதெல்லாம் செய்கிறான்? அவனிடம் உன் உத்தேசத்தை எப்போது சொன்னாய்?" என்று கேட்டார்.

"சித்தப்பா முன் மாதிரி இல்லை; நீங்கள் கவலைப்பட வேண்டாம். அடியோடு புது மனிதர் ஆகிவிட்டார். முன்பு தாம் நடந்துகொண்ட விதத்துக்காக மிகவும் வருந்துகிறார். அதற்குப் பரிகாரமாக இப்போது சோழ நாட்டின் விடுதலைக்கு உயிரையும் கொடுக்கச் சித்தமா யிருக்கிறார்" என்றான் விக்கிரமன்.

சிவனடியார், அருள்மொழியைப் பார்த்து, "தேவி! இது நிஜந்தானா?" என்று கேட்டார்.

"ஆம், சுவாமி! மாரப்ப பூபதி மனந் திரும்பியவராகத்தான் காணப்படுகிறார்" என்றாள் அருள்மொழி.

"மெத்த சந்தோஷம், விக்கிரமா! உன்னுடைய முயற்சி நிறைவேறட்டும். தேவ சேனாதிபதியான கார்த்திகேயர் உன்னைக் காத்து நிற்கட்டும். உன் தோளுக்கும் வாளுக்கும் பராசக்தி பலம் அளிக்கட்டும். அவசியமான சமயத்தில் மறுபடியும் வருவேன். இப்போது போய்வருகிறேன்" என்று எழுந்தார் சிவனடியார்.

"சுவாமி! என் சித்தப்பா இப்போது வருவதாகச் சொல்லியிருக்கிறாரே; அவர் தங்களைப் பார்க்க மிகவும் ஆவலாயிருக்கிறார். தாங்கள்



கொஞ்சம் இருந்து போக வேண்டும்'' என்றான் விக்கிரமன்.

''இல்லை, விக்கிரமா! எனக்கு இருக்க நேரமில்லை. எது எப்படியானாலும் நீ உன் உறுதியைக் கைவிடாதே. உன் தந்தையின் வாக்கை மறந்துவிடாதே'' என்றார்.

அருள்மொழித் தேவி அப்போது பொன்னனைப் பார்த்து, ''பொன்னா! இளவரசரை அழைத்துக் கொண்டு நீ படகுக்குப் போ ; இதோ நான் வந்து விடுகிறேன்'' என்று சொல்ல, பொன்னனும் விக்கிரமனும் உடனே வெளியேறினார்கள்.





○ ஆச்சர்ய ஆச்சார்யா

# அருள் பெற்ற அயல்நாட்டு ஓவியர்

''இரண்டு கைகளாலும் வண்ணக் கலவைகளை எடுத்துக் கறுப்பு வரைதாளில் என் மனம் போனபடி பதிக்கிறேன். பிறகு வரைதாளை இரண்டாக மடித்து, எனது உள்ளத்தில் ஏற்பட்ட தெய்வீக உணர்வுகளைச் சித்திரிக்கும் கண்ணாடியாக அந்த வரைதாளை எண்ணிக் கொண்டு அதனை விரல்களால் நெருடுகிறேன். பிறகு வரைதாளைப் பிரித்துப் பார்த்தால், எனது உள்ளத்தின் பிரதிபலிப்பு அற்புதமாக வரைதாளில் படிந்துள்ளதை என்னால் காண முடிகிறது. நான் ஒரு பிறவி ஓவியன். இருந்தாலும் மேற்சொன்னவாறு வரையப்பட்ட சித்திரங்களில் பல என்னையும் பிரமிப்பில் ஆழ்த்தி விடுவதுண்டு. அவற்றின் நுணுக்கங்களில் என்னையே மறந்திருக்கிறேன். எல்லாம் இவ்வுலகை ஆட்டிப் படைக்கும் ஸ்ரீசக்தியின் அருள்தான்!'' — இவ்விதம் கூறுகிறார் ஜீன் லெட்சர்ட் ஆச்சர்ய ஆச்சார்யா.

பெல்ஜியத்தின் தலைநகரான ப்ருஸெல்ஸில் பிறந்த இவர் முறையாக ஐந்து ஆண்டுகள் சித்திரம் பயின்று மிகுந்த புகழ் பெற்றவர். கேரளாவில் நடராஜ குருவைச் சந்தித்ததும் இவரது வாழ்க்கையில் பெரிய மாற்றங்கள் நிகழத் தொடங்கின. வாமித்திரியில் உள்ள 'அம்ருத பிந்து' ஆசிரமத்தின் தலைமைப் பொறுப்பை ஏற்று இன்றுவரை அங்கு வசித்து வருகிறார். வேதங்கள், உபநிஷதங்கள், இதிகாசங்கள், பகவத் கீதை போன்ற நமது சாஸ்திரங்களை நன்கு படித்துவிட்டு அவற்றின் தாத்பரியங்களை அலசுகிறார். 'சௌந்தர்ய லஹரி'யைச் சித்திரமாகத் தீட்டி வருகிறார்.

—பேட்டி: பி. ரங்கநாயகி



○ தியானத்தில் பிறந்த ஓவியம்

அருள்மொழித்தேவி அப்போது சிவனடியார் பாதத்தில் நமஸ்கரித்து, அந்தப் பாதங்களைப் பிடித்துக்கொண்ட வண்ணம் சொல்வாள் :

''சுவாமி ! தாங்கள் யாரோ எனக்குத் தெரியாது. என்னவெல்லாமோ தங்களைப் பற்றி நான் சந்தேகித்தது உண்டு. ஆனால், தாங்கள் எங்கள் நன்மையை நாடுகிறவர் என்பதில் சந்தேகப்பட்டதே இல்லை; அதனால் தங்களை யாரென்று தெரிந்து கொள்ளவும் நான் ஆசைப்படவில்லை. தாங்கள் யாராயிருந்த போதிலும் சரி, அடியாளுக்கு ஒரு வரம் தர வேண்டும். எனக்குத் தங்களைத் தவிர வேறு கதி கிடையாது.''

சிவனடியாரின் கண்களில் கண்ணீர் துளிர்த்தது.

''என்னால் முடிகிற காரியமாயிருந்தால் கட்டாயம் செய்கிறேன், அம்மா! கேள்'' என்றார்.

''தாங்கள் மகான். தங்களால் முடியாத காரியம் ஒன்றுமே இருக்க முடியாது. வேறென்ன நான் கேட்கப் போகிறேன்? என் பிள்ளையின் உயிரைத் தாங்கள் காப்பாற்றித் தர வேண்டும், சுவாமி ! இவன் இப்போது செய்யப் போகிற காரியம் வெற்றிபெறும் என்ற நம்பிக்கை எனக்கில்லை. மகா சக்தி வாய்ந்த பல்லவ சக்கரவர்த்தியை எதிர்த்து இளம் பிள்ளையால் என்ன செய்ய முடியும் ? எல்லாம் தெரிந்த தாங்களும் இந்தக் காரியத்தில் இவனை ஏவிவிட்டிருக்கிறீர்கள். தங்களுடைய நோக்கம் என்னவோ தெரியாது, சுவாமி ! என்னவாயிருந்தாலும், அவ

நிரந்தர
வண்ணம்,
வழங்கும் எழில்
திண்ணம்!



புதிய

# அப்கோலைட் சூப்பர் அக்ரிலிக் எமல்ஷன்

## அழகிய இல்லங்களுக்கு அருமையான பாதுகாப்பு

- எப்போதும் மாறாத வண்ணம்: மாக்பெத் விளக்குகளிலும் நிரூபணம் பெற்ற வண்ணம்.
- உயர்வான தரம்: 50க்கும் மேற்பட்ட பரிசோதனைகளிலும் நிரூபணம் பெற்றது.
- சீரான நயம்: அழகிய, சீரான மாட் ஃபினிஷுக்கேற்றது.




அப்கோலைட் ஸிக்நேடிக் எனமல் மரம் மற்றும் உலோகப் பரப்புகளுக்கு மிகச் சிறந்த பாதுகாப்பளிக்க, மிக அதிக விற்பனை பாகும் எனமல்.



ஏஷியன் பெயிண்ட்ஸ்

CMAP-5-183 tam




"எங்கள் கொலுவிற்கு வருக!" என அழைக்கிறது

# பூம்புகார்

10% தள்ளுபடி உண்டு



'தலையாட்டி அழைக்கிறேன். வருக, வருக! எங்கள் பூம்புகார் கொலுவுக்கு தாங்கள், தங்கள் சுற்றம் புடைசூழ வந்து, கண்டு களித்துச் செல்ல வேண்டுகிறேன்.'

**இடங்கள்:**

**பூம்புகாரின் புதிய ஷோரூம் 166-A, அண்ணாசாலை, சென்னை.**

**கலைவாணர் அரங்கம், சென்னை.**

அன்பர்கள் வாங்கும் கலைப் பொருட்களுக்கு 10% தள்ளுபடி உண்டு.

தவிர, தமிழ்நாட்டிலும், பெங்களூர், பம்பாய், கல்கத்தா, புதுடெல்லி முதலிய இடங்களிலுமுள்ள பூம்புகார் விற்பனைக் கூடங்கள் அனைத்திலும் இச்சலுகை உண்டு.

கலைவாணர் அரங்கில் கை வினைஞர்களின் அரிய கலைப்படைப்புகளின் பொருட்காட்சியும் நடைபெறுகிறது.

---

மயிலாப்பூர் கபாலீஸ்வரர் கோயிலருகில் கொலு பொம்மைகளை மலிவு விலையில் விற்கப் பூம்புகாரின் பிரத்தியேக விற்பனை நிலையமும் செயல்படுகிறது.

---

உங்கள் குழந்தைகளுக்கு விசேஷ பரிசு காத்திருக்கிறது.

---



# பூம்புகார்

166-A, அண்ணாசாலை, மற்றும்
9, அண்ணாசாலை
சென்னை 600 002.

தமிழ்நாடு கைத்திறன் வளர்ச்சி நிறுவனம்,
(தமிழக அரசு நிறுவனம்)
2-A, காலேஜ் ரோடு
சென்னை 600 006

னுடைய உயிரைக் காப்பாற்றிக் கொடுக்கும் பொறுப்பு தங்களுடையது'' என்று ராணி தழுதழுத்த குரலில் கூறினாள்.

'' உயிரைக் காப்பாற்றும் சக்தி வாய்ந்தவர் கடவுள் ஒருவர் தான், அம்மா! ஆனாலும் உனக்கு ஓர் உறுதி சொல்லுகிறேன். விக்கிரமனுடைய வீரத் தந்தையின் ஆத்மா அவன் பக்கத்திலிருந்து அவனைக் காப்பாற்றும். நீ கவலைப்படாதே, எழுந்திரு!'' என்றார்.

அச்சமயம் மேற்குத் திசையில் தூரத்தில் குதிரையின் குளம்படிச் சத்தம் கேட்கவே சிவனடியார் விரைவாக விடைபெற்றுக் கொண்டு கிழக்குத் திசையை நோக்கிச் சென்றார்.

■ ■ ■

சிவனடியார் சென்ற சற்று நேரத்துக்கெல்லாம் மாரப்ப பூபதி குதிரை மீது வந்து இறங்கினான். உடனே, ''விக்கிரமா! சிவனடியார் வரப்போகிறார் என்று சொன்னாயே? வந்துவிட்டாரா?'' என்று கேட்டான்.

'' இப்போதுதான் போனார், சித்தப்பா! போய்ச் சில விநாடி நேரம் கூட ஆகவில்லை. சற்று முன்னால் வந்திருக்கப்படாதா?'' என்று விக்கிரமன் சொல்லிச் சிவனடியார் போன திசையை நோக்கினான்.

அதைப் பார்த்த மாரப்பன், ''இந்தச் சாலை வழியாகத்தானே போனார்? இதோ அவர் முகத்தைப் பார்த்துவிட்டு வந்துவிடுகிறேன்'' என்று கூறி, மறுபடியும் குதிரை மேலேறி விரைந்து சென்றான்.

ஆனால், அவன் அந்த நதிக்கரைச் சாலையோடு வெகுதூரம் குதிரையை விரட்டிக் கொண்டு போயும் சிவனடியார் தென்படவில்லை. அவர் மாயமாய் மறைந்துவிட்டார். (தொடரும்)



○ வீணை திரு எஸ். பாலசந்தர் அவர்கள் தம் வீணையில் நீண்ட நெடுங்காலமாகப் பயிற்சி செய்து, மிகுந்த கவனத்துடன் வாசித்துள்ள 72 மேளகர்த்தா ராகங்களைப் பன்னிரண்டு எல். பி. இசைத் தட்டுக்களாக வடித்துத் தந்துள்ளார். சங்கீத ரசிகர்களுக்கும் சங்கீத மாணவர்களுக்கும் மிகவும் பயன்படக்கூடிய இந்த அரிய இசைத்தட்டுத் தொகுப்பை இந்திய கிராமபோன் கம்பெனி வெளியிட்டுள்ளது. தமிழக ஆளுநர் திரு குரானா இவ்வரிய இசைத்தட்டுக்களைச் சங்கீத கலாநிதி ஸ்ரீமதி எம். எஸ். வசம் வழங்கினார். திரு பாலசந்தர் அவையடக்கத்துடன், ''நான் வாசிக்கவில்லை, இவர்தான் வாசித்தார்'' என்று கூறித் தமது வீணையை சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து எழுந்த போது அவையோர் மெய்சிலிர்த்தனர்.



○ இலங்கைத் தொழிலாளர் காங்கிரஸ் என்ற இலங்கையின் மாபெரும் தொழில் சங்கத்தின் தலைவரும் இந்திய வம்சாவளியினரின் ஒப்பற்ற பிரதிநிதியுமான திரு சௌமியமூர்த்தி தொண்டமான் சமீபத்தில் தமது இல்லத்தில் தம் 64வது பிறந்த தினத்தைக் கொண்டாடினார்.

○ சென்னை, இந்திய இளைஞர் பொழுதுபோக்குக் கழகம் சென்னை நகரத்திலுள்ள பல கல்லூரிகளைச் சேர்ந்த ஐம்பத்தொரு மாணவ மாணவியருக்கு அவர்கள் கல்லூரிப் படிப்புக்கான ஒரு வருஷத் தொகையை ஸ்காலர்ஷிப்பாக வழங்கியது. தமிழக ஆளுநர் குரானா இந்த ஸ்காலர்ஷிப் தொகையை மாணவ மாணவியருக்கு வழங்கினார்.





# அலை ஓசை

அமரர் கல்கி

அத்தியாயம் 47

## அவமானத்தின் எதிரொலி

ஹேமாம்புஜம் கோபால கிருஷ்ணனுக்கும் கல்யாணத்துக்கும் வீட்டிலே மண்டகப்படி நடந்தது.

''பேர்தான் ஊரெல்லாம் அமர்க்களப்படுகிறது. 'வக்கீல் திலகம்', 'குறுக்கு விசாரணை மன்னன்' என்றெல்லாம் வர்ணிக்கிறார்கள். ஆனால் தனக்கென்று வரும்போது ஒரு சின்னக் கேஸை ஜெயிக்கத் தெரியலையே'' என்றாள் செல்லம், தன் கணவரைப் பார்த்து. ''கேவலம் ஒரு பெண்பிள்ளையிடம் தோற்றுவிட்டுத் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு வந்திருக்கிறீர்கள்!''

''இது அப்பாவுக்குத் தோல்வி இல்லை, அம்மா'' என்றான் கல்யாணம். ''மாசிலாமணி வழக்கை வாபஸ் பெற்றுக் கொண்டு விட்டார். ஒருவிதத்தில் அப்பாவுக்கு இது வெற்றி என்றே வைத்துக் கொள்ளலாம்.''

''போதுண்டா, சமர்த்து வழியறது'' என்றாள் செல்லம். ''அதுதான் அந்தப் பெண்ணை நீயே கல்யாணம் செய்து கொள்கிறதாகக் கோர்ட்டில் சத்தியம் பண்ணிக் கொடுத்து விட்டு வந்திருக்கிறாயே. வாக்குறுதியை வாங்கிக்கொண்ட பிறகுதானே அவர்கள் ராஜியாகப் போகச் சம்மதித்தார்கள். இதற்குப் பெயர் வெற்றியா? வெட்கக்கேடு!''

''ஏன் அப்படி வெறுத்துக் கொள்கிறாய் அம்மா? நீதானே வீட்டுக்குப் பதவிசாக, அடக்கமாக ஒரு நாட்டுப்பெண் வரவேண்டும் என்று ஆசைப்பட்டுக் கொண்டிருந்தாய்? பவானி பற்றி நானோ அப்பாவோ பிரஸ்தாபித்த போதெல்லாம் பயந்து போய், 'வேண்டாம், வேண்டாம்' என்று பதறினாயே. இப்போ உன் ஆசைப்படி அடக்கமான பெண்ணை மணந்து கொள்ளச் சம்மதித்திருக்கிறேன்.''

செல்லம், ''கஷ்டம், கஷ்டம்'' என்று நெற்றியில் தட்டிக் கொண்டாள். ''குடும்பப்பாங்கான பெண் வேண்டும் என்று நான் சொன்னது வாஸ்தவம். அதற்காக இரண்டாந்தரச் சரக்கையா ஏற்பேன்? அவள் எவனுக்கோ கழுத்தை நீட்டிவிட்டு வந்தவள். இந்த வீட்டில் அடியெடுத்து வைப்பதா? அவள் ஜாதகத்தில் என்ன தோஷமோ, சரியாக முகூர்த்த சமயத்தில் கல்யாணம் நின்று போச்சு. அவளைப் போய் இங்கே குடியேற்றுவதா?''

கல்யாணம் திகைத்துப் போனான். தன் தாயார் இடும்மென்று இப்படி ஒரு புதிய நோக்கில் கமலாவைப் பார்ப்பாள் என்று அவன் எதிர்பார்க்கவேயில்லை. 'கமலாவின் ஜாதகத்தில் ஏதாவது தோஷம்இருந்தால் அது கல்யாணமாகிய தான்தான்' என்று—தன் தாயாருக்கு எப்படி எடுத்துக் கூறிப் புரிய வைப்பது? தோஷம், கல்யாணத்தின் வடிவிலே தோன்றித்தானே திருமணத்தை நிறுத்தியது?

''கேட்டியாடா?'' என்றார் கோபாலகிருஷ்ணன். ''இதையெல்லாம் யோசித்துத்தான் நான் கோர்ட்டிலேயே உன் சட்டையைப் பிடித்து இழுத்து உட்கார வைக்கப் பார்த்தேன். நீ என்னடாவென்றால் வீராதி வீரனாக உன்னைக் காட்டிக் கொள்ள என்னென்னமோ உளறி வைத்தாய்.''

''நான் ஒன்றும் உளறவில்லை, அப்பா! நன்றாக யோசித்து, இதுதான் சரியான முடிவு என்ற தீர்மானத்துக்கு வந்திருக்கிறேன். உங்களுக்காகவோ அல்லது அம்மாவுக்காகவோ நான் இனி மாறப் போவதில்லை. உங்களுக்குக் கமலாவைப் பிடிக்கவில்லையென்றால் நான் தனிக் குடித்தனம் வைத்துக் கொள்ளத் தயார்'' என்று உறுதியாகக் கூறிய கல்யாணம், கோபம் கலந்த வேகத்தோடு சட்டையை மாட்டிக் கொண்டு விடுவிடென்று புறப்பட்டான். நாடகத்துக்கு மாற்றுத் தேதி நிர்ணயித்துச் சமூக சேவா சங்கத்தில் மறுபடியும் ஒத்திகைகள் ஆரம்பமாகியிருந்தன.

''ஐயோ! இப்படிப் பெரிய கல்லாத் தூக்கிப் போட்டுட்டுப் போறானே! நீங்களும் கேட்டுண்டு சும்மா இருக்கிறீர்களே!'' என்று புலம்பினாள் செல்லம்.

கோபாலகிருஷ்ணன், வீட்டு யுத்தம் எப்படி யாவது போகட்டும்; உலக யுத்தத்தைக் கவனிப்போம் என்று எண்ணியவராக அன்றைய நாளிதழில் ஆழ்ந்தார்.

▫ ▫ ▫

மாசிலாமணி முதலியார் வீட்டில் காமாட்சி அம்மாள் அங்கலாய்த்துக் கொண்டிருந்தாள்: ''வீடாவது, வீடு! அரண்மனை மாதிரி இருந்ததே! மூன்று அலமாரிகள் நிறைய வெள்ளிச் சாமான். ஒரே ஒரு வெள்ளிக் கூஜாவைத் தூக்கிப் பார்த்தேன்; கனமாவது கனம்! இந்தக் கையாலேயே இரும்பு அலமாரி சரியாகப் பூட்டியிருக்கிறதா என்று அழுத்திப் பார்த்துவிட்டு வந்தேனே! எல்லாம் போச்சு. அதையெல்லாம் ஆள இந்தத் துக்கிரிப் பெண்ணுக்குக் கொடுத்து வைக்கவில்லே.''

''அதைப் பற்றி இப்போ பேசி என்ன செய்ய? எல்லாமே நன்மைக்குத்தான் என்று வைத்துக் கொள். மாப்பிள்ளை என்று பார்த்தால் கல்யாணசுந்தரம் எவ்வளவோ உசத்தி. இளம் வயசு, நல்ல படிப்பு, பார்க்கவும் இலட்சணமாய் இருக்கிறான். பணம் காசு, சொத்து சுதந்திரம் எதற்கும் குறைவில்லே; ஒரே பையன்......''

''இத்தனை இருந்தும் என்ன புண்ணியம்? அம்மா கோண்டுவாக அல்லவா இருப்பான் போலிருக்கிறது? புருஷப் பிள்ளைகளுக்குச் சுயபுத்தி வேண்டாமோ?''

''சுயபுத்தி இல்லாமலா அவ்வளவு பேர் நடுவில் கோர்ட்டில் 'நான் கமலாவைக் கல்யாணம் செய்து கொள்கிறேன்' என்றான்?''

''அவன் சமர்த்தை நீங்கள்தான் மெச்சிக் கொள்ள வேண்டும். நாளைக்கு அவனே வந்து நின்று, 'எங்கம்மா இந்தக் கல்யாணம் வேண்டாம் என்கிறாள், நான் என்ன பண்ணறது?' என்று கையை விரித்தாலும் விரிப்பான்.''

அப்போது ரங்கநாதனின் நகைப்பெட்டியொன்றை எடுத்து வந்து தகப்பனாரிடம் நீட்டி, ''இதைக் கொண்டுபோய்க் கொடுத்து விடுங்கள், அப்பா!'' என்றாள் கமலா.

காமாட்சி அம்மாள் சரேலென்று இடையில் பாய்ந்து அதைப் பிடுங்கிக் கொண்டாள். ''இப்போ ஒண்ணும் அவசரமில்லே; எங்கே ஓடிப் போறது? பார்த்துக் கொள்ளலாம்'' என்றாள். ''மூதேவிக்கு அதிர்ஷ்டம் வந்தால் மூணு நாளைக்கு நிலைக்கும் என்பார்கள்; உனக்கு ஒரு நாள்கூட நிக்கலேயே.''

''அப்பா! வெறுமனே அம்மா என்னை வையுறாளே? நான் என்ன தப்பு செய்தேன்?'' என்று விசும்பினாள் கமலா.

''முகூர்த்த வேளை பார்த்துக் கண்ணால் ஜலம் விட்டுக் கொண்டு நின்றாயே, அது போதாதா?'' என்றாள் காமாட்சி.

இந்தச் சமயம் வாசலில் யாரோ வரும் சத்தம் கேட்டது.

''இந்தா, காமாட்சி வாயை அடக்கு! யாரோ வருகிறார்கள்'' என்றார் மாசிலாமணி. ''அப்புறமாக உன் பிரலாபத்தை வைத்துக் கொள்ளலாம்.''

''யார் வந்தால் எனக்கு என்ன? எதற்கு நான் பயப்பட வேண்டும்?''



''நன்றாயிருக்கிறது; உங்களுக்கு என்ன பயம்? நீங்கள்தான் மானம், வெட்கம் எல்லாத்தையும் விட்டவர்கள் ஆச்சே!'' என்று கூறிக் கொண்டே செல்லம் உள்ளே நுழைந்தாள்.

''பார்த்தீர்களா, நான் சொன்னது சரியாய்ப் போச்சா?'' என்றாள் காமாட்சி.

''நீ என்ன சொன்னாய்?'' என்றார் மாசிலாமணி.

''சொன்னேன், சுரைக்காய்க்கு உப்பில்லே என்று! ஏண்டி கமலா, நீதான் சொல்லேன். இல்லே, உனக்கும் மறந்து போச்சா? 'அம்மாவின் தலைப்பைப் பிடித்துக் கொண்டு வளைய வருகிற அந்தப் பிள்ளை, கோர்ட்டிலே சவடாலாகப் பேசினதுதான் மிச்சம்; காரியத்திலே உறுதியா இருக்கமாட்டான்'னு சொன்னேனா, இல்லையா?''

''அவன் எதற்காக உறுதியா நிற்கணும்? ஊரிலே உங்களைப் பற்றி நாலு பேர் நல்லவிதமாகப் பேசினால் அவனும் தான் கொடுத்த

வாக்கைக் காப்பாற்றக் கடமைப்பட்டிருக்கான். ஆனால் காது கொடுத்துக் கேட்க முடியாத விஷயமெல்லாம் உங்களைப் பற்றி அடிபடுகிறதே !''

'' அப்படி என்னம்மா சொல்ரு, எங்களைப் பற்றி ?'' என்று மாசிலாமணி சற்றுக் கோபமாகவே கேட்டார்.

'' அதை என் வாயாலே சொல்லித்தான் ஆகணும் என்கிறீர்களாக்கும்; சொல்றேன். நீங்கள் இந்தப் பெண்ணை அழைத்துக் கொண்டு ஊர் ஊராகப் போகிறது ; அங்கங்கே யாராவது ஒரு கிழவனை மயக்கி இவளை அவனுக்குக் கல்யாணம் செய்து கொடுக்கிறது ; அவனிடத்தில் பணமும் நகையுமாகப் பறித்துக் கொண்டு இன்னோர் ஊரைப் பார்க்கப் போய்விடுகிறது. இதுவே உங்கள் தொழில் என்று பேசிக் கொள்கிருர்கள், போதுமா ?''

''சிவ சிவா !'' என்று காதுகளைப் பொத்திக் கொண்டார் மாசிலாமணி.

'' சிவனையும் விஷ்ணுவையும் கூப்பிடுவானேன்? இதோ, உங்க பெண்டாட்டி கையிலே இருக்கே, நகைப் பெட்டி அது யாருடையது ? எங்கிருந்து வந்தது ? அது ஏன் இன்னும் அதன் சொந்தக்காரரிடம் போய்ச் சேரவில்லை ?''

'' ஐயையோ ! இதென்ன அபாண்டம்'' என்ருர் மாசிலாமணி.

'' அபாண்டமோ பிரும்மாண்டமோ, எனக்கு அதைப் பற்றிக் கவலை இல்லை. எனக்கு இருக்கிறது ஒரே பிள்ளை. கோர்ட்டிலே அவன் ஏதோ க்ஷண நேர வேகத்திலே ஏதோ சொல்லி விட்டான் என்பதற்காக அவன் கழுத்திலே இந்தப் பெண்ணைக் கட்டி விடலாம் என்று பார்க்காதீர்கள். என் உடம்பில் உயிருள்ள வரை அது நடக்காது. நாங்கள் ரொம்ப ஆசாரம் பார்க்கிறதில்லை ; என் வீட்டுக்காரர் முற்போக்குக் கொள்கை களை உடையவர்தான் ; அதற்காக எச்சில் பண்டங்களைத் தொட்டுக் கொண்டாடுகிறதில்லை !''



செல்லம்மாள் படபடவென்று இப்படிப் பொரிந்து தள்ளிவிட்டுத் திரும்பி விடுவிடு என்று நடந்து விட்டாள்.

மாசிலாமணி அவமானம் தாங்காமல் மேல் துண்டால் முகத்தை மூடிக் கொண்டார்.

நகைப் பெட்டியை அப்போதும் விட மனமில்லாமல் இறுக அணைத்துக் கொண்ட காமாட்சி, "கிணற்றிலே விழுந்தியே — அப்பவே போயிருக்கக் கூடாதா நீ! இன்னும் என்னவெல்லாம் அவமானங்களை எங்களுக்குத் தேடி வைக்கப் போகிறாயோ? நானாக இருந்தால் மலையிலேயிருந்து குதித்துப் பிராணனை விட்டு விடுவேன்" என்று கூறிக் கமலாவின் கன்னத்தில் ஒரு முறை குத்தி நிமிண்டிவிட்டு உள்ளே சென்றாள்.

கமலா அழவில்லை. அழுது அழுது கண்ணீரெல்லாம் வற்றி வறண்டுவிட்டது போல் நின்றாள். 'நானாக இருந்தால், மலையிலேறிக் குதித்தாவது பிராணனை விட்டுவிடுவேன்' என்று காமாட்சி கூறியது திரும்பத் திரும்ப அவள் மனத்தில் எதிரொலித்துக் கொண்டிருந்தது.

## அத்தியாயம் 48

# வேதனையில் ஒரு வாலிபன்

மறு நாள் காலை தீப்பெட்டியில் பாக்கியிருந்த நாலு குச்சிகளைக் கமலா யாரும் அறியாமல் குப்பையில் போட்டுவிட்டு, நெருப்புப் பெட்டி வாங்கி வருவதாகக் கூறிவிட்டுப் புறப்பட்டாள். "விகனை அனுப்பேன்" என்றாள் காமாட்சி. "வீட்டில் தலைக்கு மேல் காரியம் இருக்கே."

"எனக்கு தேறாம் ஒர்க் இருக்கு" என்று எதிர்ப்புக் குரல் கொடுத்தான் விக.

"சமர்த்து" என்று தனக்குள் அவனை வாழ்த்தினாள் கமலா. கண்ணாடியில் தன் அழகை இன்னொரு தடவை பார்த்துக் கொண்டாள். சாகும்போது பிரமாதமாகத் தன்னை அலங்காரம் பண்ணிக் கொண்டு இறக்க வேண்டும் என்று அவள் இரவெல்லாம் யோசனை செய்து தீர்மானித்திருந்தாள். எனவே தான் இன்று காலை குளித்துவிட்டுத் தனக்குச் சமீபத்தில் வாங்கப்பட்ட புதிய புடவைகளுள் அதிக ஆடம்பரம் இல்லாத ஒன்றைப் பார்த்து உடுத்திக் கொண்டாள். வழக்கத்தைவிட அதிகமாகவே இரண்டாவது முறையாகப் பவுடரைப் போட்டுக் கொண்டு அப்புறம் விகாரமாகிவிட்டது என்று துண்டால் ஒற்றி எடுத்தாள். குங்குமம் 'பளிச்'சென்று நெற்றியில் இலங்கியது. மை தீட்டிய விழிகள் மானின் பார்வையை வென்றன. செண்ட் மணம் கமகமத்தது!

இரவு படுத்திருக்கும்போது ஒரு தீர்மானத்துக்கு வரத்தான் தாமதமாயிற்று. தீர்மானத்துக்கு வந்த பிறகு அவள் அமைதியாக உறங்கினாள். இப்போது உற்சாகமாகக் கிளம்பினாள். அவள் நடையிலே எல்லாத் துன்பங்களிலிருந்தும் விடுதலை பெறப் போகிற உல்லாசத் துள்ளல் இருந்தது. இந்த உலகை, அதன் அழகுகளை முதல் தடவையாகப் பார்ப்பவள் போல் அகன்று விரிந்த கண்களால் நோக்கி ரசித்தாள். சூரியோதயம், பட்சிகளின் கானம், சற்றுத் தூரத்தில் தெரிந்த மலைகள், அவற்றின் பசுமை, மலை முகடுகளில் சிரமப் பரிகாரம் செய்ய அமரும் மேகக் குவியல்கள் எல்லாவற்றையும் 'இதுதான் கடைசித் தடவை' என்று எண்ணியபடியே பார்த்தாள். கூடவே, மனத் திரையில் கல்யாணத்தின் சுந்தரமான வதனம் தெரிந்தது. அதனையும் உள்ளத்தின் கள்ளத்தால் அள்ளி விழுங்குபவளாகப் பார்த்தாள். "போய் வருகிறேன்" என்று அவனிடம் விடைபெற்றுக் கொண்டாள்.

மலைப் பாதையில் சற்றுத் தூரம் ஏறிய பஸ், ஒரு குக்கிராமத்தில் நின்றது. அங்கேதான் வழக்கமாகக் கமலா இறங்கிக் கொள்வாள். அங்கிருந்து சிறிது தூரம் நடந்தால் அவனும் பவானியும் அடிக்கடி சந்திக்கும் இரகசிய இடமான அந்த மொட்டைப் பாறையை அடையலாம். அந்த இடத்திலிருந்து அவள் தொலைவில் தெரிந்த ராமப்பட்டண வீதிகளையும் பெட்டி பெட்டியான வீடுகளையும் நோக்கினாள். அதோ, கல்யாணத்தின் வீடு அதுதானா? அல்லது இதுவா? இப்பால் பெரிய ஏரி தகதகத்துக் கொண்டிருந்தது. அருகே அவள் எத்தனையோ தடவை ரசித்து மகிழ்ந்திருந்த சரக்கொன்றை மரம். இந்தப் பக்கம் மொட்டைப் பாறையில் அவள் ஆசையோடு செதுக்கிய வார்த்தைகள்: "கமலாவின் கல்யாணம்!" அவற்றை அவள் ஒருமுறை தடவிக் கொடுத்துவிட்டுப் பாறை மீது ஏறினாள். 'பகவானே, இரண்டு முறை உயிரை விட முயன்ற என்னைக் காப்பாற்றி அருளினாய். இந்தத் தடவை அப்படி ஏதும் செய்துவிடாதே! முதல் தடவை கல்யாணத்தையும் இரண்டாவது முறை பவானியையும் அனுப்பி என்னை மரணத்தின் வாயிலிருந்து காத்தது போல் இப்போதும் யாரையாவது அனுப்பிவிடாதே! இன்று எனக்குத் தான் வெற்றி கிட்ட வேண்டும்!' இப்படி எண்ணியவாறு கமலா பாறையிலிருந்து பாய்வதற்குத் தயாரானாள். கல்யாணத்தின் உருவம் மனமெல்லாம் நிறைந்திருக்க அதனை அகக் கண்ணால் பார்த்தபடியே குதிக்கத் தீர்மானித்தாள்.

அந்தச் சமயம் அவள் காதுகளில் அந்த முனகல் சத்தம் கேட்டது. "ஹூம், ஹூம்" என்று தாங்க முடியாத வேதனையை வெளிப்படுத்தும் முனகல் ஒலி.

கமலா பரபரப்புடன் இப்படியும் அப்படியும் பார்த்தாள். பிறகு பாறையிலிருந்து கீழே இறங்கிச் சத்தம் வந்த திசையை நோக்கி விரைந்தாள்.

அங்கே மற்றொரு சிறிய பாறைக்குப் பின்னால் அவள் கண்ட காட்சி அவளைத் திகைக்க வைத்தது!

# நறுமணத்திற்கும், சருமப் பாதுகாப்பிற்கும் உங்கள் அபிமான நடிகை சுஜாதா உபயோகிப்பது

# ராதாஸ்
## ஆயுர்வேத சோப்




**Sujatha** MADRAS

Cine Artiste

நான் எப்பொழுதும் விரும்பி
உபயோகிக்கும் சோப்
ராதாஸ் ஆயுர்வேதிக் சோப்.
என் மேனி அழகுக்கும்,
உற்சாகத்திற்கும் ஊக்கமளிக்
கிறது இந்த சோப். வெளிப்
புறப் படப்பிடிப்பிற்கு சென்றால்
நான் இந்த சோப்பையே
உபயோகிக்கின்றேன்.
அப்போது வீட்டில் குளிப்பது
போல் எல்லாவித சௌகரிய
மும் எனக்குக் கிடைக்கிறது.
காரணம் என்னவென்றால்
இந்த சோப்பில் கஸ்தூரி
மஞ்சள், வெற்றிவேர், ஓமம்,
கச்சோளம் ஆகிய இயற்கை
யான மூலிகையால் தயாரிக
கப்படுகிறது இந்த சோப்.

Sujatha



தயாரிப்பவர்கள்

**ராதாஸ் ஆயுர்வேதிக் சோப் ஒர்க்ஸ்**

கொல்லம்-2 (கேரளா)

# எல்லா விதத்திலும் சிறந்த பல்புகள் பிலிப்ஸ் பல்புகள்





எங்களது வாடிக்கையாளர்களின் நன்மதிப்பைப் பெற நாங்கள் அரும்பாடுபட்டு உழைத்துள்ளோம். அவர்களது நியாயமான நம்பிக்கையைப் பெறுவது அவ்வளவு எளிதல்ல

அதற்குத் தேவை மிகக் கடுமையான தரப் பரிசோதனை முறைகள் ஒவ்வொரு லாம்பும் 47 வித தரப் பரிசோதனைக்கு உள்ளாகின்றன அதன் விளைவு ஒவ்வொரு லாம்பும் மிக உயர்ந்த சர்வதேச தரத்தினைப் பெறுகிறது

உங்கள் நம்பிக்கைக்குக் கட்டுப்பட்டு மிக நேர்த்தியான தயாரிப்புகளையே நாங்கள் அளிக்கக் கடமைப் பட்டுள்ளோம்.







## பிலிப்ஸ்—லாம்ப் மற்றும் ஒளித்துறையில் முன்னோடிகள்




## பிலிப்ஸ்

பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

PHL 9365

கதர் ஜிப்பாவும் பைஜாமாவும் அணிந்த ஒரு வாலிபன் அங்கே ஒரு கல்லின் மீது தலை வைத்துக் கண்களை மூடி முனகிக்கொண்டிருந்தான். அவன் வலது தோளில் இரத்தம் கசிந்தும் உறைந்தும் ஜிப்பா சிவந்து காணப்பட்டது. அதோடு கடுமையான ஜுரமும் அவனுக்கு இருப்பதாகத் தோன்றியது. கமலா தயங்கித் தயங்கி அவன் நெற்றியில் உள்ளங் கையை வைத்துப் பார்த்தாள். அனலாகச் சுட்டது.

கமலாவின் உள்ளத்தில் பச்சாத்தாபம் பெருகியது. பயமாகவும் இருந்தது. சுந்தரமான களையான முகம் இப்படி வாடி விட்டதே' என்று எண்ணி இரங்கினள். காயத்திலிருந்து ரத்தம் பெருகி ஜிப்பா நனைந்திருப்பதைப் பார்த்துக் கலக்கம் அடைந்தாள்.

கமலாவின் கரம் நெற்றியைத் தொட்டு வருடியதும் அந்த வாலிபனின் கண்கள் மிகுந்த பிரயாசைப்பட்டு மெல்ல மெல்லத் திறந்தன. (தொடரும்)



# முற்றிய நோய்க்கு முனைப்புடன் சிகிச்சை!

இவ்விதழ் மேலட்டையில் இருக்கும் குமாரி ஆஷா ஆஸ்பத்திரியில் இருக்கிறார்! அதுவும் விசேஷ வைத்தியப் பாதுகாப்புப் பகுதியில் நிற்கிறார்! கவலைப்படாதீர்கள், புகைப்படக்காரர் எஸ். என். ராவ் ஒரு 'கிளிக்' செய்ததும் குமாரி ஆஷா வீடு திரும்பி விட்டார். அவருக்கு உடம்புக்கு ஒன்றும் இல்லை. ஸ்டான்லி மருத்துவ மனையின் விசேஷ வைத்தியப் பாதுகாப்புப் பகுதி எப்படி இயங்குகிறது என்று பார்க்க ஆசைப்பட்டுப் போனார். அவ்வளவுதான். நாமும் அங்கே போய்ப் பார்ப்போமா?

மஞ்சள் காமாலை முற்றி 'கோலிமியா' என்ற கொடிய வியாதியால் அவதிப்படலாம். இரத்த யூரியாவினுல் 'யூரீமியா' வந்து கஷ்டப்படலாம். பல புதிய மருந்து, மாத்திரைப் பிரயோகத்தினுல் மயக்கம் போட்டு விழுந்துவிடலாம். ரத்தக் கொதிப்பினுல் உயிர் ஊசலாடலாம். சுவாசக் குழாய் கோளாறுகளினுல் மூச்சுவிடச் சிரமப்படலாம்.

இப்படித் திடீரென்று உயிருக்கு ஆபத்து விளைவிக்கக் கூடிய 'முற்றிய' நோய் கண்டவர்களை உடனே விசேஷமாகக் கவனித்துச் சிகிச்சை செய்ய ஏற்பட்ட பகுதி இது. இதிலும் உட்பிரிவுகளாக இதய நோய் சிகிச்சைக்கென்று தனிப் பகுதியும் மற்ற ஆபத்தான நோய்களுக்கென்று தனிப் பகுதியும் உள்ளன.

டாக்டர் எம். எஸ். ராமச்சந்திரன் தலைமையில் இயங்கும் இந்த விசேஷ வைத்தியப் பகுதி இருபத்தி நான்கு மணி நேரமும் சேவைக்குக் காத்திருக்கிறது. அவருக்கு உதவியாக டாக்டர் கே. சொக்கலிங்கமும், டாக்டர் ராமசாமியும் தேர்ந்த பல நர்ஸ்களும் முற்றிய நோய் உடையவர்களைப் பாதுகாக்கும் பணியில் ஈடுபட்டுள்ளார்கள். இந்த விசேஷ வைத்தியப் பகுதியில் முப்பது படுக்கைகள் உள்ளன.

"சமீபத்தில் இங்கே தொத்துநோயாகிய மஞ்சள் காமாலை முற்றிய நோயாளிகள் இருவர், இரத்தப் பரிமாற்றத்தினுல் உடல் தேறிய அற்புதத்தைக் கண்டோம். இது போல் உயிர் ஊசலாடும் நோயாளிகளுக்கு நாற்பத்தெட்டு மணி நேரம் கவனத்துடன் சிகிச்சை செய்து உயிர் மீட்டுப் பிறகு பிற பகுதிகளுக்கு அனுப்புகிறோம். மாதம் 150 முற்றிய நோய் உடையவர்களைப் பரிசீலிக்கிறோம். இதில் எங்களுக்கு அறுபது சதம் வெற்றி கிட்டுகிறது!" என்று விசேஷ வைத்தியப் பகுதியின் தலைமை டாக்டர் இரு எம். எஸ். ராமச்சந்திரன் விளக்குகிறார்.

"முன்பு ஆஸ்பத்திரிகளில் சகட்டுமேனிக்கு ஒரே வார்டில் எல்லாவித நோயாளிகளையும் வைத்துப் பரிசீலிக்க வேண்டியிருந்தது. இப்போது அப்படியில்லை. முற்றிய வியாதி உள்ளவரை உடனே இங்கு அனுப்பி விடுகிறோம். எல்லாவித மருத்துவ உதவிகளையும் அளிக்கிறோம். ஈ. ஸி. ஜி., எக்ஸ்ரே, ரத்தம் ஆகியவை கணத்தில் ஒருங்கே பெற்று இங்கே சிகிச்சை அளித்துவிட முடிகிறது!" என்கிறார் டாக்டர் சொக்கலிங்கம் எம். டி.

"எங்கள் விசேஷ வைத்தியப் பகுதிகளில் நவீன வைத்திய சாதனங்கள் உள்ளன. இன்னும் பல விசேஷ வைத்தியக் கருவிகள் வெளிநாட்டிலிருந்து வரவிருக்கின்றன. வைத்திய மாணவர்களுக்கு எங்கள் வார்டு ஆராய்ச்சிக்குரிய வைத்தியக் களமாகவும் உள்ளது!" என்று பெருமைப்படுகிறார் டாக்டர் எம்.எஸ். ராமச்சந்திரன்.

முதலில் இதய வியாதிகளுக்கு மட்டுமே தனி வைத்தியப் பகுதி ஏற்படுத்தப்பட்டது. இதய வியாதி தவிர மற்ற முற்றிய நோய்களுக்குத் தனிப் பகுதி அமைக்க வேண்டும் என்ற திட்டத்தை அறிவித்தவர் வைத்தியத் துறை டைரக்டர் நாராயணன்.

1790ம் வருஷமே வட சென்னையில் வாழும் எளிய மக்களின் பிணி தீர்க்கத் தொடங்கப்பட்டது ஸ்டான்லி மருத்துவமனை என்கிறார் ஸ்டான்லி மருத்துவமனை முதல்வர் ஏ. உமாபதி.

தமிழகத்தில் ஆறு விசேஷ வைத்தியப் பாதுகாப்புப் பகுதிகள் (Intensive Cere Units) இருக்கின்றன. தமிழகத் தலைநகரில் ஜெனரல் ஆஸ்பத்திரி, ராயப்பேட்டை ஆஸ்பத்திரி, ஸ்டான்லி மருத்துவமனைகளிலும் மதுரை, தஞ்சாவூர், கோயமுத்தூர் நகரங்களில் உள்ள ஆஸ்பத்திரிகளிலும் இந்த விசேஷ வைத்திய முறைகள் உள்ளன. — பி. எஸ். மணி

# கொலுவிருக்கும்
# இல்லங்களில்
# குடியிருப்பாள் லக்ஷ்மி

# மகிழ்ந்திருக்கும்
# இல்லங்களில்
# மலர்ந்திருப்பாள் கீதா

முப்பெரும் பண்டிகைகள்
நவராத்திரி, ரம்ஜான், தீபாவளி

மங்களகரமான இந்நன் நாட்களில்
கீதாவின் கண்கவர் காஞ்சீபுரம்-
பனாரஸ்-தர்மாவரம் பட்டு ஜவுளிகளை
அணிந்து இன்புற்று மகிழுங்கள்.
மற்றும் உயர்தர மில், கைத்தறி
ஜவுளி ரகங்களும் ரெடிமேட் ஆடை
களும் நவ நாகரீக டிசைன்களில்
ஆயிரமாயிரம் வண்ணங்களில்
தேர்ந்தெடுக்க அழைக்கிறது கீதா.

உங்கள் விருப்பமறிந்து
செயல்படும்
ஒரே நிறுவனம் கீதா.



# கீதா

சில்க் & சாரி பஜார்
31, N.S.B. ரோடு, திருச்சி-620002.

CROWN GS-157

# வட்டமேஜை



☐ திரு நா. பார்த்தசாரதி அவர்களின் கட்டுரைத் தொடரில் போலந்தில் உள்ள ஓஸ்வியென்சிம் (Oswiencim) என்ற இடத்தில் நாஜிகள் யூதர்களுக்கு இழைத்த கொடுமைகளைப் படித்தேன். இப்போதும் யூதர்கள் சோவியத் ரஷ்யாவிலும், கம்யூனிஸ்ட் கிழக்கு ஜெர்மனியிலும், வார்சா ஒப்பந்த நாடுகளிலும் இரண்டாம்தரக் குடிமக்களாகவே நடத்தப்படுகின்றனர். மற்ற மக்களுக்குள்ள சிறிதளவு சுதந்திரமும் அங்கே யூதர்களுக்கு இல்லை. சோவியத் யூனியனிலிருந்து தப்பி வெளியேறிய அலெக்ஸாந்தர் சோல்ஷெனிட்சன் மற்றும் அங்கேயிருந்து செய்தியை வெளியே அனுப்பிய அனடோலி மார்ச்செங்கோவ் இவர்களே இதற்குச் சான்று.

சென்னை — 33
9—9—76 சியென். கல்பகம்

☐ ஷோல்ஷெனிட்சன் தலையங்கம் சரியான முறையில் இல்லை. தலையங்கத்தின் ஆரம்பத்தில் மனசாட்சியின் காரணமாக உண்மையை அப்படியே எழுதிவிட்டு, பிறகு முதலாளித்துவ ரீதியில் ஷோல்ஷெனிட்சன் சார்பாக எழுதி உள்ளீர்கள்.

பெங்களூர் — 1
6—9—76 எஸ். துரைசாமி

☐ ஷோல்ஷெனிட்சன் என்ற தலையங்கம் ஜனநாயகத்துக்காகவே வாழ்நாள் முழுதும் பாடுபட்டு வந்த ராஜாஜிக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் அமைந்திருக்கிறது. கம்யூனிஸ நாடுகளில் எல்லா வசதிகளும் இருந்தாலும், அந்த வசதிகளைவிட முக்கியமான பூர்ண சுதந்திரத்தைப் பற்றியும், அது அங்கு இல்லாதது குறித்தும் வெகு அழகாக எழுதியிருக்கிறீர்கள்.

சென்னை—24
3—9—76 கே. ஏ. சுந்தரராஜன்

☐ திரு கே.எஸ். நாராயணனின் தியாகத்தை உழைப்பை - நம்பிக்கையை - விடாமுயற்சியை வெல்லாம் நான் முழுதும் பாராட்டலாம். அப்பேர்ப்பட்ட உழைப்பின் மொத்த உருவத்தைக் கண்டுதான் ''கடின உழைப்புக்கு இணை ஏதுமில்லை'' என்ற தொடர் உருவாக்கப் பட்டதோ ?

சிங்கம்புணரி
14—9—76 ரெ. குப்புசாமி

☐ ''துப்புக் கூலி'' போட்டிக் கதை படித்து மெய் சிலிர்த்துப் போனோம்.

அழகிய கிராமிய நடையில் கடமை தவறாத ரணவீரசாமியின் கதை உண்மையான கர்மவீரன் அவமானத்தைத் தாங்க மாட்டான் என்பதை வலியுறுத்துகிறது. கிராமச் சூழலை நன்கு படம் பிடித்துக் காட்டும் சிறந்த சிறுகதை. அனைவரும் படித்து ரசித்தோம்.

அறந்தாங்கி
9—9—76 வி. எஸ். அனந்தராமன் குடும்பத்தினர்

☐ பத்தாண்டுகளுக்கு மேல் நம் தேசியக் கவி சுப்பிரமணிய பாரதியார் புதுவையில் வாழ்ந்திருக்கிறார். அங்கே தான் அரவிந்தர் அருளால் அவருடைய சிறந்த இலக்கிய — மெய்ப் பொருள் வாழ்க்கை உருவாகியுள்ளது. அப்படியிருந்தும் அவருக்கு அங்கே இந்நாள் வரை ஒரு சிலை நிறுவப்படாமல் இருப்பது பெரிதும் வருந்துதற்குரியது. இந்திய அரசின் நேரடி ஆட்சியில் புதுவை உள்ள இந்நெருக்கடி கால நேரத்திலும் நம் தேசிய மகா கவி சுப்பிரமணிய பாரதியாருக்கு ஒரு சிலையைப் புதுவையில் விரைவில் நாட்டுதல் நன்றும்.

சென்னை—5
9—9—76 ந. சஞ்சீவி

☐ இன்றைய அரசின் கல்வித் துறை சுற்றறிக்கை ஆணைகள் மூலம் பள்ளி நூலக விவரங்களை மிக மிக அவசர நடவடிக்கை மூலம் கேட்டுக் கொண்டிருக்கிறது. கேட்டுள்ள விவரங்களை உடனே சமர்ப்பித்திருப்பார்கள் என்று நம்புகிறேன்.

1964ல் பள்ளி நூலகவளர்ச்சியைத் தடைப்படுத்திவிட்டு இதுகாறும் நீக்கப்படாமல் உள்ளது. பல பள்ளிகளில் நூலகர் இன்றி நூலகம் சரியாகப் பயன்படுத்தாமலே உள்ளது. மாணவர் அறிவு வளர்ச்சிக்கும் சுய சிந்தனைக்கும் உதவுபடியாக நூலக வளர்ச்சிக்கு அடிகோலுமாறு அரசைக் கேட்டுக் கொள்கிறேன்.

சென்னை—7
9—9—76 எஸ். நடராஜன்

☐ கடலை எண்ணெயைக் கண்ணால் பார்க்கவே முடியவில்லை. இரண்டு வாரங்கள் ரேஷன் கடைகளில் கொடுத்தார்கள். இப்போது இல்லை என்கிறார்கள். நல்லெண்ணெய் ரூ. 6—40க்கு விற்றது போய் இப்போது விலை கிலோ ஒன்றுக்கு ரூ. 9-80பைசா. அதிகாரிகள் கவனிப்பார்களா?

சென்னை—94
15—9—76 ஆ. ஏழுமலை

☐ நண்பர் ஆத்மா அவர்களே, உமது 'கண்ட்ரோல் பெட்டி' எனக்குக் கிடைத்தது. அந்தப் பெட்டியைத் திருப்பி அனுப்ப முடியாததற்காக வருந்துகிறேன். ஏனெனில் அது என் மனைவியிடம் போய்விட்டது. சமீபத்தில் ரஷ்யாவின் ஜெட் ஒன்று பைலட்டுடன் ஜப்பானை அடைந்ததே, அதைத் திருப்பிப் பெற்றுக்கொள்ள முடிந்தாலும் முடியுமே தவிர, என் மனைவியிடமிருந்து கண்ட்ரோல் பெட்டியைப் பெற்றுக் கொள்வது இயலாது.

சென்னை
12—9—76 ஜி. ராஜாராமன்

# பாடுவோம் பாப் மியூசிக்!

12

கதை: தமயந்தி / சாருகேசி
சித்திரம்: ராஜு..

மார்க்கசகாயம் வீட்டில்—







எல்லாம் நல்ல விஷயம் தான். உன் கல்யாண விஷயம்.

ஐயோ, பாரதியைத் தான் நான் கல்யாணம் பண்ணிக் கொள்ளணும் என்பாரோ?

சொல்லுங்கள் அப்பா.

உன் கல்யாணத்தை அடுத்த மாசம் ஜாம் ஜாம் என்று நடத்தத் தீர்மானித்திருக்கிறேன். மாப்பிள்ளை யார் தெரியுமோ?

என்னப்பா இது, கல்யாணம் எனக்கா, இல்லே உங்கள் சபா அங்கத்தினர் யாருக்காவதா?

ஹ ஹ ஹா! உனக்குத் தான் கல்யாணம். பிள்ளை யார், சொல்லு பார்ப்போம்!




கல்யாணத்துக்கு யார் முக்கியம்? பணக்கார மாப்பிள்ளை! கிடைச்சாச்சு. பிள்ளை யார் என்று தெரிந்தால் நீ சந்தோஷத்தில் மிதப்பாய்.




பெரிய தொழிலதிபர் எஸ்.எஸ். லிங்கத்தின் ஏக புத்திரன் பாலாஜி.
அடக் கடவுளே! அப்பா, எனக்குத் தலை சுற்றுகிறது ஆர்யபட்டா மாதிரி. நான் பாலாஜியைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள முடியாது.


இது என்ன அசட்டுத்தனம்! பாலாஜி மாதிரி ஓர் அறிவாளி கணவனாக வர எத்தனை பாக்கியம் செய்திருக்க வேண்டும்! இதை நிராகரித்தால் நீ ஒரு முட்டாள் வித்யா.
யார், பாலாஜியா அறிவாளி? சரியான கீழ்ப்பாக்கம் கேஸ் அவர்.


பாலாஜிக்கு உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள ஒரே ஆசை. லிங்கத்துக்கு நம் சம்பந்தம் கிடைத்ததில் பிரமாத சந்தோஷம். நேற்றைக்கு போனில் இந்த எண்ணத்தைச் சொன்னதும், போனிலேயே சம்மதம் தந்து விட்டார்


எனக்கு இதில் சம்மதமில்லை.


வித்யா, இது நல்லதில்லை. நீ யாரை யாவது மனசில் நினைத்துக் கொண்டிருந்தால் சொல்லித் தொலை. அவனுக்கு ரூபாயைக் கொடுத்து ஊரை விட்டே அனுப்பி விடுகிறேன்.
நான் பண்ணிக் கொண்டால் மிஸ்டர் அருணைத்தான் கல்யாணம் பண்ணிக் கொள்வேன்!


யார், அந்த பாப் கார்ன் மியூசிக்காரனா?
ஆமாம், பாப் மியூசிக் திலகம் மிஸ்டர் அருண்!

தொடரும்



# வெளியே வெய்யில் அடிக்கிறது!

"அப்போ நான் வரட்டுமா...?"

அவர் குரல்தானா இது? – இந்த அலுவலக அறையில் எப்போதுமே ஓங்கி ஒலித்துக் கொண்டிருந்த அவர் குரலா இப்போது இப்படிப் பம்மி உடைந்து சிதறுகிறது?

ஆமாம். இதை அவருடைய அலுவலக அறை என்று இனிச் சொல்ல முடியாது. இதோ, அவர் உட்கார்ந்திருந்த நாற்காலியில் அமர்ந்திருக்கும் புதிய மனிதரே அதற்கு சாட்சி.

நேற்றுக் கூட இதே நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு ஹெட்கிளார்க் வேணுவை விளாசிக் கொண்டிருந்தார் அவர்.

இன்று...?

அவரால் நம்ப முடியவில்லை.

அவருக்குச் சீட்டைக் கிழித்து விட்டார்கள் என்பதை அதிகார பூர்வமாக அவர் கையிலிருக்கும் உத்தரவு கூறும் போது இன்னும் அவநம்பிக்கைப் பட என்ன இருக்கிறது! அவரிடம் பொறுப்பை வாங்கிக் கொண்டு அவரை விடுவித்து விட்ட இளைஞன், இதோ அவருடைய நாற்காலியில் உட்கார்ந்திருக்கிறானே!

"ஜீப்பை அனுப்பறேன் – வீட்டிலே கொண்டு விட! ஐ ஆம் ரியலி சாரி ..பட்...!"

– எதையோ சொல்ல முயன்று சொல்லத் தெரியாமல் அந்த இளைஞன் தடுமாறிக் கொண்டிருக்கிறான்.

"மற்றதையெல்லாம் கொஞ்சம் கவனிச்சு..." என்று அவர் தொடங்குவதற்குள்...

"ஓ, நோ! அதெல்லாம் நான் பார்த்துக்கறேன்!"

அவன் மேசையின் மீதிருந்த மணியை அமுக்குகிறான். பஸ்ஸர் அலறுகிறது.

நீலமேகம் வருகிறான்.

அவர் அவனைப் பார்க்கிறார். அவன் அவரை பார்க்கவில்லை. புதிய அதிகாரியின் மீதுதான் கவனம் பதித்திருக்கிறது.

ஓ! இந்த நீலமேகம் இப்போது என் சேவகன் இல்லை. அவருக்கு இந்த இழப்பை நினைப்பதே பெரிய இழப்பாக இருக்கிறது.

"டிரைவரைக் கூப்பிடு...!"

நீலமேகம் போகிறான். சற்றைக்கெல்லாம் டிரைவர் உள்ளே நுழைகிறான்.

"ஸாரை வீட்டிலே கொண்டு போய்விட்டுட்டு வா!"

"சரிங்க....!"

அவர் எழுந்திருக்கிறார். நாற்காலியைப் பின்னுக்குத் தள்ளி விட்டு, புதிய அதிகாரியும் எழுந்து, பாண்ட் பைக்குள் கை விட்டுக் கொண்டு நிற்கிறார்.

அலுவலகத்தில் மௌனம் கவிந்திருக்கிறது. அவருடைய பிரிவு ஏற்படுத்திய சோகமா? இருக்காது. அவர் பிரிவுக்கு வருந்துபவர்கள் அங்கே யார் இருக்கப் போகிறார்கள்?

இன்று காலை வரை, இந்த முப்பதுவருடப் பணி வாழ்வில் அவர் யாருடனும் சுமுகமாக நடந்து கொண்டதில்லையே! அப்படியிருக்கையில் இன்று அவர் கட்டாய ஓய்வு பெறுகிறார் என்பதற்காக யார் கண்ணீர் வடிக்கப் போகிறார்கள்?

அவருக்கு, தம் நடத்தை தெரியாததல்ல! பிறர் மனம் நோக வேண்டும் என்பதிலேயே குறியாயிருந்து அதிகாரம் செலுத்திப் பழகியவர் அவர். தம் கீழ்ப் பணி புரிபவர்கள் அவர் பார்வையில் கீழ்மக்கள் தாம்!. அப்படியே இத்தனை வருடங்களையும் அவர் ஓட்டி விட்டவர்.

ஹாலைக் கடந்து செல்கையில், அவரையும் மீறி அவர் பார்வை கவரோரம் நின்றிருக்கும் ராமசாமி மீது படிகிறது. நமுட்டுச் சிரிப்பு சிரித்துக் கொண்டு அவரை ஏளனமாகப் பார்க்கிறான் அவன்.

இவரைக் கண்டாலே தொடை நடுங்கும் அந்த ராமசாமியே இப்படி என்றால்...? தலை கவிழ்ந்தவாறே நடந்து சென்று, போர்ட்டிகோவில் நிற்கும் ஜீப்பில் ஏறிக் கொள்கிறார்.

கடைசியாக, இந்த வண்டியில் அவர் வீட்டுக்குப் போகிறார்! இனி, இந்த வண்டி அவரைச் சுமந்து செல்லாது. இப்போது கூட, அவரிடம் பொறுப்பேற்க வந்திருக்கும் புதிய அதிகாரியின் தயவில் தான் அவர் போய்க் கொண்டிருக்கிறார்.

இனிமேல் எங்கே போவதானாலும் பஸ்ஸில் தான் போக வேண்டும்! இரண்டு மூன்று நாட்களில் செய்தித்தாளில் அவர் பெயர் வெளி வந்த பிறகு, தெருவில் அவரைப் பார்க்கிறவர்களெல்லாம் பரிதாபமாகவோ ஏளனமாகவோ தான் அவரைப் பார்ப்பார்கள்.

நினைக்கும் போதே அவருக்குத் தலை வலித்தது. துரைசாமி ரோடு வந்து விட்டது.

பழக்க தோஷத்தில், சரியாக அவர் வீட்டு வாசலுக்குக் கொண்டு போய் வண்டியை நிறுத்தினான் டிரைவர். ஆயின், வழக்கம் போல் இறங்கி வந்து அவரது பிரீப் கேஸை எடுத்து கொண்டு அவர் பின் நடக்கவில்லை.

பதவியில் இல்லை என்ற தருணத்திலேயே இவர்களுக்கெல்லாம் எத்தனை இளக்கார

மாகப் போய் விடுகிறது! இறங்கியவர், தாமே தம் பிரீப்கேஸைக் கையில் எடுத்துக் கொண்டார்.

இருக்கையை விட்டு எழுந்திராமலேயே ''வரட்டுமா ஸார்?'' என்று அவரிடம் விடை பெற்றுக் கொண்டான் டிரைவர்.

எத்தனை கால வஞ்சத்தை இப்படி அவன் தீர்த்துக் கொள்கிறானோ?

அவர் அவனுக்குப் பதில் சொல்லிக் கொண்டு நிற்கவில்லை. திரும்பிப் பார்க்காமலேயே கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே போய் விட்டார்.

ஜீப் கிளம்பிச் செல்லும் ஓசை கேட்கிறது.

வேட்டியும் பனியனும் அணிந்து கொண்டு சோபாவில் சாய்ந்தவருக்கு உடம்பே அறுந்து விழுந்துவிட்டாற் போன்றிருந்தது.

ஓய்வு பெறும் காலம் வந்து ஓய்வு பெற்றுச் செல்வதே சங்கடமான காரியம்தான். இப்படிக் கட்டாய ஓய்வு என்ற பெயரில் கழுத்தைப் பிடித்துத் தள்ளாத குறையாக வீட்டுக்கு அனுப்புவதைத் தாங்குவது...?

கமலாவிடமும் குழந்தைகளிடமும் இதை எப்படிச் சொல்வது ? கிட்டத்தட்ட ஆயிரம் ரூபாய் வந்துகொண் டிருந்தது அவருக்கு. இனி...?

கிராசுவடி, பிராவிடண்ட் பண்ட்–இவற்றின் வழியாக வரும் தொகையைக் கொண்டு கவிதாவுக்குக் கல்யாணத்தை நடத்திவிடலாம். முந்நூறு ரூபாய் பென்ஷனை வைத்துக் கொண்டு எட்டுக் குழந்தைகளைப் பராமரிக்க முடியுமா ? பெரிய பையன் இப்போதுதான் பி. ஏ. முதல் வருடம் படிக்கிறான். அவன் படித்து முடித்து வேலைக்குப் போகிற வரைக்கும்...?

– இப்படி யெல்லாம் எல்லோருக்கும் பிரச்னைகள் இருக்கத்தானே செய்யும் ? அது அவருக்கு இத்தனை நாட்களாக ஏன் தோன்றவில்லை ?

'பிறர் கஷ்டங்களை நினைத்துப் பார்த்துக் கொண்டிருந்தால் இந்த நிலைக்குக்கூட என் குடும்பம் வந்திருக்க முடியாது ! எவன்தான் உலகத்தில் யோக்கியமாக இருக்கிறான்? தன் காரியத்தைச் சாதித்துக் கொள்வதற்காக, பதவியில் இருக்கும்போது அவனவன் ஏதோ கொடுத்தான். இனி மேல் எவன் அரைக் காசு கொடுக்கப் போகிறான்....?'

'அப்படியெல்லாம் வாங்கியதால்தான் இப்போது வீட்டுக்கு அனுப்பியிருக்கிறார்கள்!'

அவர் மனம் இரண்டு கூறாய்ப் பிரிந்து பேசிக் கொண்டிருந்தது.

''காப்பி...!'' கமலா காப்பி டம்ளருடன் நின்று கொண்டிருந்தாள்.

காப்பியைக் கையில் வாங்கியவாறே, மனைவியின் முகத்தைப் பார்த்தார் அவர், விஷயம் அவளுக்குத் தெரிந்திருக்கக் கூடுமோ என்று ஆராய்பவரைப் போல !

அவள் முகத்தைப் பார்த்தால் அப்படித் தெரியவில்லை.

'' நான் இனிமேல் ஆபீஸுக்குப் போக வேண்டாம் !'' என்றார் அவர் அமைதியாக.

''ஏன்.....?''

''கம்பல்ஸரி ரிடையர்ட்மெண்ட்.'' சொல்லும் போது சொற்கள் குழறுவதை அவரால் தவிர்க்க முடியவில்லை.

கமலா வாய் அடைத்துப் போய் நின்றாள்.





**அதர்மத்திலும் அதர்மம் !**

இந்தியாவிலேயே லாட்டரிச் சீட்டு நடத்தி இரண்டு கோடி நஷ்டம் சம்பாதித்த மாநிலம் பீஹார்! இங்கு சம்பந்தப்பட்ட அதிகாரிகள் லாட்டரிச் சீட்டு அச்சடித்த அரசாங்க அச்சகத்திலேயே போலி சீட்டுகளையும் அச்சடித்து விற்பனை செய்திருக்கிறார்கள்! -காரவான் - பாபு

---

ஒரு வாரம் ஊர்ந்து சென்றது. ஆமாம்! ஊர்ந்துதான் சென்றது. எத்தனையோ நாட்களாக வீட்டில் இருப்பதைப் போல் உணர்ந்தார் அவர். எதிலும் மனம் ஒட்டவில்லை. ஓர் ஈடுபாடு இல்லை.

கமலாதான் மிகவும் பாதிக்கப்பட்டிருந்தாள். மூத்த பையன் சேகரைத் தவிர மற்றக் குழந்தைகள் இதை அவ்வளவாகப் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை.

கட்டாய ஓய்வு பெற்றவர்களின் பட்டியலில் செய்தித் தாளில் அவர் பெயர் வெளியாகிவிட்டது. செய்தித் தாளைக் கையில் வைத்துக் கொண்டு அம்மாவுடன் பேசிக் கொண்டிருந்தான் சேகர்.

தம் அறையில் கட்டிலில் சாய்ந்து கொண்டிருந்த அவருக்குச் சேகரின் பேச்சு தெளிவாகக் கேட்டது.

''இதிலே அப்பாவின் பெயர் எப்பவோ வந்திருக்கணும். கொஞ்சம் லேட் ! இவரைப் பற்றி மத்தவங்க எவ்வளவு கேவலமாகப் பேசறாங்க, தெரியுமா ? — ஒருத்தர்கூட இவருக்கு இரக்கப்படலையே அம்மா !''

அவர் காதில் விழ வேண்டும் என்பதற்காகத்தான் அவன் இவ்வளவு இரைந்து பேசுகிறானோ ? — எழுந்து போய் அவன் கன்னத்தில் அறைய வேண்டும் போல இருந்தது.

கையை யாரோ கட்டிப் போட்டுவிட்டாற் போன்று இதென்ன இயலாமை !

பேசாமல் கட்டிலில் புரண்டு படுத்தார்.

நாட்கள் நகர்ந்து நகர்ந்து இரண்டு மாதங்கள் ஓடிவிட்டன. விழித்துக் கொண்டிருக்கும் ஒவ்வொரு கணமும், கனமாகத் தம்மை அழுத்துவதை அவர் உணர்ந்தார். உழைக்துக் களைத்து வந்த நாட்களில் அவரை அரவணைக்க ஓடி வந்த தூக்கம், அவர் ஓய்வு பெற்றுவிட்ட இந்த நாட்களில் தானும் ஓய்வெடுத்துக் கொண்டுவிட்டது ! தூக்கம் வராததால் அர்த்தமில்லாத சிந்தனைகளுடன் கழிக்கும் இரவுகளும், பொழுதின் குரல்வளையைப் பிடித்துத் தள்ள — நகரும் பகற்பொழுதுகளும் ! பைத்தியமே பிடித்துவிடும் போல் ஆகிவிட்டது அவருக்கு.

பணத்தின் தேவையை உணர்த்தும் சந்தர்ப்பங்கள் இன்னும் நேர்ந்துவிடாதபோதிலும், ஏதும் செய்யாமல் பொழுதை ஓட்டிக் கொண்டிருக்கும் இந்தச் சங்கடத்தை இனி தாங்க முடியாது என்று அவர் உணரத் தலைப்பட்டிருந்தார்.

காலைக் காப்பியைக் குடித்துவிட்டு, தினப் பத்திரிகையைப் பிரித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தவரின் கண்களில், பத்திரிகையில் வெளியாகியிருந்த ஒரு விளம்பரம் தென்பட்டது.

'உமேஷ் ஏஜென்ஸீஸ்' என்ற நிறுவனத்தில் அலுவலக அக்கௌண்ட்ஸிலும் மானேஜ்மெண்டிலும் அனுபவம் வாய்ந்த ஒரு நபர் தேவை என்றும், தகுதிக்கேற்பச் சம்பளம் கொடுக்கப்படும் என்றும் அந்த விளம்பரத்தில் கண்டிருந்தது. இரண்டு மூன்று முறை அதைப் படித்துப் பார்த்தவர், அந்த நிறுவனம் விரும்பும் தகுதிகள் தம்மிடம் இருக்கும் போது தாம் ஏன் அந்த வேலைக்கு மனுச் செய்யக் கூடாது என்று நினைக்கலானார்.

தம்முடைய அனுபவங்களை விளக்கமாக விவரித்து, உமேஷ் ஏஜென்ஸிக்கு ஒரு மனு எழுதி அன்றையத் தபாலில் சேர்த்துவிட்டார். தாம் கட்டாய ஓய்வு பெற்றுவிட்டதை மட்டும் மனுவில் குறிப்பிடவில்லை.

ஒரு வாரத்திலேயே 'இண்டர்வியூ'வுக்கு அழைப்பு வந்துவிட்டது அவருக்கு. அவரே அதை இவ்வளவு சீக்கிரம் எதிர்பார்க்கவில்லை.

ஓய்வு பெற்ற அன்று, காரில் வீட்டுக்கு வந்தவர்தான். இன்னும் வெளியே தலை காட்டவில்லை. இன்றுதான் அவர் வெளிக் கிளம்பப் போகிறார்.

சோர்வெல்லாம் போய், பழைய தெம்பும் உற்சாகமும் வந்த மாதிரி இருந்தது.

'கம்பல்ஸரி ரிடையர்ட்மெண்ட் என்பதை மறைக்க முடியாது. இருந்தாலும், சாதுரியமாகப் பேசி எப்படியாவது இந்த இடத்தில் வேலைக்கு அமர்ந்துவிட வேண்டும். அப்புறம்.... நெஞ்சை நிமிர்த்திக்கொண்டு நடக்கலாம்.....!'

இண்டர்வ்யூவிக்கு அவரைத் தவிர யாரும் வந்திருப்பதாகத் தெரியவில்லை. ஒரு வேளை வெவ்வேறு நேரத்தில் ஒவ்வொருவராக இண்டர்வியூ செய்கிறார்களா...?

மானேஜர் ஓர் இளைஞனாக இருக்கக்கூடும் என்று அவர் எதிர்பார்க்கவில்லை. முப்பது வயதுதான் இருக்கும். 'இண்டர்வியூ' நடத்தினான்.

'' உங்கள் அனுபவத்தைச் சொல்லியிருக்கிறீர்களே தவிர, அந்த வேலையை ஏன் விட்டீர்கள் என்று சொல்லவில்லையே...!''

இந்தக் கேள்வி அவர் எதிர்பார்த்ததுதான்.

''ரிடையர்ட் ஆகிவிட்டேன்.''

அவன் அதைக் காதில் வாங்கிக் கொண்டே மறுபடியும் அவரது மனுவில் பார்வையை ஓடவிட்டான்.

''உங்களைப் பார்த்தால் அப்படியொன்றும் வயதானவராகத் தோன்றவில்லையே?'' என்று தலை நிமிர்ந்து அவரைப் பார்த்துக் கூறினான்.

''ஆனால்...''

''சொல்லுங்கோ !''

''கம்பெல்ஸரி ரிடையர்ட்மெண்டிலே..!''

''ஓ....!''

இந்த 'ஓ'வுக்கு என்ன அர்த்தம் ?

''இந்தக் காலத்திலே எடுத்ததற்கெல்லாம் புகார்கள்! வேண்டியவன் — வேண்டாதவன்

என்று என்னென்னவோ....? நான் ரொம்பவும் கண்டிப்பாக இருப்பேன். அதனால் என் கீழ் வேலை செய்பவர்களில் பலருக்கு என்னைப் பிடிக்காது. இதனால் எல்லாம்....''

''ஆல்ரைட்... ஆல்ரைட்...'' என்று கூறி அவரை மேலே பேசவிடாமல் கையமர்த்தினான் அவன்.

மோவாய்க்கட்டையில்பேனாவின் பின்புறத்தால் தட்டிக் கொண்டே அவரைப் பார்த்து, ''என்னை உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதா?'' என்று அவன் கேட்டபோது அவருக்கு அதிர்ச்சியாக இருந்தது.

'இவனை எங்கே பார்த்திருக்கிறோம்...?'

அவருக்கு நினைவில்லை.

''இல்லையே....!''

''பரவாயில்லை. ஆனால் நான் உங்களை மறக்கவில்லை. பத்து வருடங்களுக்கு முந்தி உங்கள் ஆபீஸில் ஒரு தாற்காலிக வேலைக்கு இண்டர்வ்யூவுக்கு உங்களிடமே வந்திருக்கிறேன்.....''

''அப்படியா....?''

''படித்து முடித்த சமயம். எனக்கு அப்போது வேலை மிகவும் தேவையாக இருந்தது. நீங்கள் மனசு வைத்தால் வேலை கிடைக்கும் என்று எல்லாரும் சொன்னார்கள். உங்களிடம் என் நிலையைச் சொன்னேன். வீட்டில் வந்து பார்க்கச் சொன்னீர்கள்.....''

அவர் நினைவுபடுத்திப் பார்த்தார். எத்தனையோ இம்மாதிரி நிகழ்ச்சிகள்.... இந்த நிகழ்ச்சி நினைவில் இல்லை.

அவர் முகத்தைப் பார்க்காமல் கீழே குனிந்தவாறு பேசிக் கொண்டிருந்தான் அவன். ''வாய் கூசாமல் நீங்கள் என்னிடம் எவ்வளவு பணம் கேட்டீர்கள் தெரியுமா ?''

திடுக்கிட்டு அவனைப் பார்த்தார் அவர்.

அவன் முகம் உணர்ச்சியேறி ஜொலித்தது.

''உங்களைப் போன்றவர்களுக்கு இந்த நிறுவனத்தில் வேலை இல்லை.... ஐ ஆம் ஸாரி.''

திடீரென அவன் எப்படி அறைந்துவிட்டான் ! அவனிடம் என்ன பேசுவது...?

''எஸ், யூ கேன் கோ !''

திடீரென அவன் குரல் கடுமையுடன் ஒலித்தது.

தள்ளாடிக் கொண்டே எழுந்தார் அவர்.

அவரைப் பார்க்க விரும்பாதவன் போல், தலையைக் குனிந்து கொண்டிருந்தான்.

எழுந்து மெதுவாக வெளியே வந்தார் அவர். வெயில் பளீரென்று அடித்துக் கொண்டிருந்தது. திடீரென்று ஏற்பட்டுவிட்ட அசதியுடன் அவர் அந்த வெய்யிலில் நடக்கத் தொடங்கினார்.

வெய்யிலின் உக்கிரத்தை அவரால் தாங்கத்தான் முடியவில்லை.

# ரகு வீரன் துணை வருவான்

கச்சேரிகளுக்குக் கூட்டம், வருவதில்லை என்ற முணுமுணுப்பை இப்போதெல்லாம் நிறையக் கேட்கிறோம். அன்று (செப்டம்பர் 5ந் தேதி) நடந்த மகாராஜபுரம் திரு சந்தானம் கச்சேரி போல் பல கச்சேரிகள் அமைந்தால் மேற்படி முணுமுணுப்பு படிப் படியாகக் குறைந்து மறைந்தே போகும் என்பது உறுதி.

மாம்பலத்தில் மாலைக் கச்சேரி ஆரம்பித்துச் சற்று நேரத்துக்கெல்லாம் ஒரு ஜெட் விமானம் பறந்து அந்த ஓசை கச்சேரியைச் சற்று நேரம் தடைப்படுத்தி நிறுத்திவிடும். அன்று என்னவோ விமானத்தைக் காணோம். அதற்குப் பதிலாகத் திரு சந்தானம் சங்கராபரண ராக ஆலாபனையின்போது ஜிவ்வென்று ரசிகர்களை ஆகாசத்துக்கே கொண்டு போய் விட்டார். இந்த நாத விமானத்தில் சத்தம் இல்லை; சுருதி சுத்தம் இருந்தது !



அடாணா, சண்முகப்பிரியா, சங்கராபரணம், சகானா முதலிய பிரபல ராகங்களுக்கிடையில் பாடப் பெற்றபோது காங்கேயபூஷணி பொலிந்தது.

கொடைக்கானலில் பலமாக ஒரு மழை அடித்து ஓய்ந்ததும் சுற்றுமுற்றும் பார்த்தால் திரும்பிய பக்கமெல்லாம் மலைச் சாரல்களில் அருவிகள் கொட்டக் காணலாம். சந்தானத்தின் பாட்டு அப்படி. கம்பீரமாக அமர்ந்து கரத்தை மேலிருந்து கீழாக ஒரு நெளிவு கொடுத்து இறக்கும் போது சங்கதிகள் அடுக்கடுக்காக அருவி போல் கொட்டுகின்றன, ஜில்லென்று!

அன்று பிரதான ராகம் ஷண்முகப்பிரியா. சந்தானத்தின் ஷண்முகப்பிரியா சலசலத்து ஓடும் ஆற்று நீரை நினைவுபடுத்தியது என்றால் லால்குடி திரு ஜெயராமனின் வயலின்வாசிப்பில் பரந்த ஏரியின் கம்பீர அமைதியைக் கண்டோம். பல்லவியில் நிரவலின் போதே ராகமாலிகையாக அமைத்துப் பாடியது சற்றுப் புதுமையாக விளங்கி நிறைவும் மகிழ்ச்சியும் தந்தது.

இன்றும் என்றும் நினைவிலிருக்கும் தியாகையரின் அடாணா ராகக் கீர்த்தனை. ''ரகுவீரனே நீ என் பின்னர் எனக்குத் துணையாக வருவாயாக'' என்று அழைக்கிறார். ''ரா ரா'' என்று சந்தானம் கெஞ்சிக் குழைந்து பாடியது வெகு அழகு.

சரி, கச்சேரி நடந்தது எந்த சபாவின் ஆதரவில்?.... வேண்டாம், திருஷ்டிபட்டு விடப் போகிறது !

—குட்டிகிருஷ்ணன்

# போட்டிக் கதை :- 4

**கா**ர் ஹாரன் சத்தம் கேட்டவுடனேயே கூர்க்கா அவசரமாகக் கேட்டைத் திறந்து விட்டு விறைப்பாக ஸல்யூட் அடித்தான். அந்தப் பளபளப்பான பியட் கார் புல்வெளியைச் சுற்றி வந்து போர்டிகோவில் நின்றது. கூர்க்கா கேட்டைத் திரும்ப மூடுவதற்குள் 'விர்'ரென்று பறந்து காரின் அருகில் வந்து நின்றது ஒரு வெஸ்பா ஸ்கூட்டர்.

''டாடீ! நான் உங்களை எவ்வளவு நேரமாகத் தொடர்கிறேன், நீங்க திரும்பிப் பார்க்கவேயில்லையே?'' என்று வேர்த்து, விறுவிறுக்கத் 'தொப்'பென்று ஸ்கூட்டரிலிருந்து குதித்தாள் நிருபமா. வெள்ளை முழுப் பாண்டும், 'ப்ரெட்பரி' பனியனும், கையில் டென்னிஸ் மட்டையுமாக நின்ற மகளைப் பார்த்துப் பெருமிதத்துடன் சிரித்தார் நரசிம்மன். ''ரோட்டிலே போறவங்கள்ளாம்தான் யார் இந்த வெண் துகிலுடுத்த தேவதைன்னு திரும்பித் திரும்பிப் பார்க்கிறாங்களே, நானும் பார்க்கணுமா என்ன?''

''போங்க டாடீ!'' என்று கொஞ்சினாள் நிருபமா. மகளை அணைத்தவாறே வீட்டுக்குள் நுழைந்தார் நரசிம்மன்.

அவருக்கு என்றுமே தம் மக்களைப் பற்றி அலாதிப் பெருமையுண்டு. சமுதாயத்தின் கீழ் மட்டத்திலிருந்து சொந்த முயற்சி ஒன்றால் மட்டுமே மேலேறி இன்று ஒரு பெரிய இன்ஜினீயரிங் கம்பெனியின் எக்ஸிக்யூடிவ் டைரக்டராகி இருப்பவர் அவர். தம் குழந்தைகளிடம் அறிவையும், பண்பையும் வளர்க்க அவர் பெரும் பாடு பட்டிருந்தார்.

சாதாரண நிலையில் இருந்தபோதும்கூட காலையில் ஆறு மணிக்கே பத்து வயது ரவியையும், எட்டு வயது நிருபமாவையும் பஸ் ஏறி ஒய். எம். ஸி. ஏ. நீச்சல் குளத்தில் பயிற்சிக்கு அழைத்துச் செல்வார். எங்கு மதச் சொற்பொழிவானாலும் சரி, நவீனபாணி ஓவியக் கண்காட்சியானாலும் சரி குழந்தைகளுடன் சென்று அவர்கள் கலை ஆர்வத்தையும் மத ஞானத்தையும் வளர்ப்பார். அதிகம் படித்திராத அவர் மனைவி சரஸ்வதிக்கு இதெல்லாம் ஒரு வேடிக்கையாகவே இருக்கும். ஆனால் தன் கணவரின் முயற்சி எப்படிப்பட்ட பலனை அளித்திருக்கிறது என்று அவளுக்கு இப்போது புரிகிறது.

ரவி இன்று பொறியியல் கடை நிலை மாணவன். வகுப்பில் ஒவ்வொரு வருடமும் முதல். கிரிக்கெட்டில் மாகாண ஆட்டக்காரன். கிதார் வாசிக்கிறான். ஆங்கில சங்கீதம் பாடுகிறான். கவிதை எழுதுகிறான். தற்கால நாகரிகத்துக்கேற்பப் பிடரி வரை முடி வளர்த்திருந்தாலும் எவரையும் மதிக்கும் பண்பின் உறைவிடமாக இருக்கிறான்.

பெண்களை வீட்டில் அடைத்து வைக்கும் பட்டிக்காட்டுத்தனம் பிடிக்காத நரசிம்மன் நிருவைப் பாரதியின் புதுமைப் பெண்ணாகவே உருவாக்கி யிருந்தார். நிரு நல்ல அழகு. பேசும்போது அதிராது. அடக்கமாக, ஆனால் கம்பீரமாக ஓடும் நதியின் அழகு இருக்கும். பண்பு ஒளி வீசும். திறமை



பளிச்சிடும். புடவையை இழுத்துக் கட்டிக் கொண்டு அம்மாவுக்குச் சமையலறையில் உதவுவாள். சௌந்தரிய லஹரி சொல்வாள். பாண்டும், ஸ்கர்ட்டும் அணிந்து கொண்டு, டென்னிஸூம் விளையாடுவாள். பி.காம் பரீட்சை தேறி, எம். பி. ஏ. என்ற நிர்வாகப் படிப்புப் படிக்கிறாள். பரதத்தில் தேர்ந்த பயிற்சி பெற்றிருக்கிறாள். கர்னாடக சங்கீதம் பாடுவாள். ஆங்கில சங்கீதத்திலும் லயிப்புண்டு. ஞாயிறு ஓவியர் சங்கத்தில் அவள் ஒரு புள்ளி.

நரசிம்மன் டிபன் சாப்பிடுவதற்குள் நிரு குளித்து உடை மாற்றிக் கொண்டு வந்தாள்.

''டாடீ! உங்க ஈவினிங் புரோக்ராம் என்ன?''

''மாலையிலே ஒண்ணும் வேலை இல்லேம்மா. ராத்திரிதான் கிளப்பில் காக்டேல் டின்னர். இன்னிக்கு வருடாந்தர போர்ட் மீட்டிங் நடந்தது. அதற்கு மங்களம் இந்த டின்னர்.''

''இந்த டைரக்டர்களுக்கெல்லாம் வேறு வேலையே கிடையாதா டாடீ? பம்பாயிலிருந்தும், டெல்லியிலிருந்தும் விமான டிக்கட் வாங்கி வரதும், இங்கே ஐந்து நட்சத்திர ஹோட்டலில் தங்கி வயிறு முட்டச் சாப்பிட்டுவிட்டுக் குடித்துவிட்டுக் கம்பெனி தலையில் பில்லைக் கட்டுவதும் தவிர? ஐ ஆம் ஷ்யூர், உங்க டைரக்டர்களில் பாதிப் பேருக்கு பாலன்ஷீட்டைக்கூடப் படிக்கத் தெரியாதுன்னு.''

''அதெல்லாம் தெரிந்த விஷயங்கதானே?'' என்று நரசிம்மன் சூள்கொட்டினார்.

''டாடி! நாளைக்குப் பாஸ்கருக்குப் பிறந்த நாள். ஏதாவது பரிசு வாங்கணும்.'' தந்தையின் கழுத்தைக் கட்டிக் கொண்டாள் நிரு.

''அதுக்கென்னம்மா, சீக்கிரமே போயிட்டு வந்துடலாம்.''

தந்தையும் மகளும் கடைக்குக் கிளம்புவதைப் பார்த்த சரஸ்வதி, ''அப்படியே வேஷ்டி, துண்டு எடுத்திட்டு வந்துடுங்க. நாளைக்கு ஒங்க ஐயா திதி. அய்யரைப் படையலுக்கு வரச் சொல்லியிருக்கிறேன்'' என்று ஞாபகமூட்டினாள்.

அந்த மாபெரும் டிபார்ட்மெண்டல் ஸ்டோரில் பலருக்கும் நரசிம்மனைத் தெரிந்திருக்கது. அவர் மானேஜருடன் பேசிக் கொண்டிருக்கும் போதே நிரு பாஸ்கருக்குப் பரிசாக ஒரு நீல் டயமண்டும், ஒரு விக்டர் வில்வஸ்டருமாக இரண்டு ஸ்டீரியோ ரிகார்டுகள் எடுத்து வந்தாள்.

''டாடி! தொண்ணூத்திரண்டு ரூபாய் ஆகிறதே, அதிகமா?''

'' பரவாயில்லேம்மா. விலையைப் பற்றிக் கவலைப்படாதே. உனக்கு எது பிடிக்கிறதோ, எடுத்துக் கொள்.''



நண்பர்: (பார்க்கில்) என் சார், கடன்காரர் தொந் தரவுக்குப் பயந்து கொண்டு இருட்டும்வரை இப்படி பார்க்கிலேயே அமர்ந்திருந்தால் எப்படி? காலா காலத் தில் வீட்டுக்குப் போங்கள்.

மற்றவர்: எப்படி சார் வீட்டுக்குப் போவேன்? கடன் வாங்கி இருப்பதே, என் மனைவியிடமாயிற்றே!

▣▣▣▣▣▣▣▣▣▣▣▣▣▣▣▣▣▣▣▣▣▣

மானேஜர் பில் புத்தகத்தை எடுத்து வந் தார். அதன் அடியில் கையொப்பமிட்ட நர சிம்மன், "நாளைக்கு அகவுண்டண்டுக்கு வவுச் சர் அனுப்பிவிடுங்கள்" என்றார்.

இரவு மணி ஒன்று. போர்டிகோவிலும் முன் ஹாலிலும் விளக்கு எரிந்தது. சரஸ்வதி அம்மாள் ஓய்வில்லாமல் உலாவிக் கொண் டிருந்தாள். பரீட்சைக்குப் படித்துக்கொண் டிருந்த ரவி மாடியிலிருந்து கீழிறங்கி வந்தான்.

"ஏம்மா, இன்னும் படுக்கப் போகலையா?"

"என்னப்பா செய்யறது? உங்கப்பா வீடு வந்து சேரும் வரையில் மனம் நிலைகொள்ள மாட்டேங்கறதே. அதுவும் போன வருடம் இருதயக் கோளாறு வந்தபோது டாக்டர் மதுவே கூடாதுன்னு சொன்னதிலிருந்து 'காக்டெயில் பார்ட்டி' என்றால் மனம் 'பக் பக்' என்று அடிக்கக்கிறது."

ரவி பதில் ஒன்றும் பேசவில்லை.

நரசிம்மன் தள்ளாடியவாறு உள்ளே நுழை யும்போது மணி மூன்றைக் கடந்திருக்கும்.

"ஏங்க இவ்வளவு லேட் ஆயிடிச்சே? நான் ரொம்பக் கவலைப்பட்டேன்."

"ஸோ வாட்? நீ தூங்குவதுதானே?" அவர் குரல் உயர்ந்திருப்பதிலிருந்து உள்ளே சரக்கு சற்று அதிகமாகவே ஏறி இருப்பது அவளுக்குப் புரிந்தது.

"டாமி! மணி எட்டாகி விட்டதே. நீங்க எழுந்திருக்கவில்லையா?" நிரு கர்ட்டனை விலக் கிக்கொண்டு எட்டிப் பார்த்தாள்.

மனைவியை எதிர்பார்த்த அவருக்கு மகளின் வரவு சலிப்பை அளித்தது.

"அம்மா என்ன செய்யறா?"

"குளிச்சிட்டு இப்பத்தான் பூஜை அறைக் குள் போனாங்க."

"சரி. நீ போய் அம்மாவைக் கூப்பிடு." நிரு அவரை விநோதமாகப் பார்த்துவிட்டுக் கீழிறங்கிச் சென்றாள்.

"என்னங்க உடம்பை ஏதாவதும் செய் யுதா?" கலவரத்துடன் மாடி ஏறி வந்தாள் சரஸ்வதி. முடிச்சிட்ட தலையிலிருந்து சரம் சொட்டியது. முகத்தில் மஞ்சள் துலங்கியது. அப்போதுதான் செடியிலிருந்து பறித்த மலர் போல் ஒரு புதுமையும், மென்மையும் அவள் முகத்திலும் உடலிலும் பரவி நின்றது.

"என்னங்க அப்படிப் பார்க்கிறீங்க? நெஞ்சு வலிக்குதா?"

நரசிம்மன் சடாரென்று அவள் கையைப் பிடித்து இழுத்தார். சரஸ்வதி நிலைகுலைந்து அவர் மேல் சாய்ந்தாள்.

"ஐயா திதியாச்சேன்னு நான் காலையிலே குளிச்சுப் புதிசு உடுத்திட்டேன். இது சரி யில்லைங்க." சரஸ்வதியின் மறுப்புக்களும் பொங்கும் கண்ணீரும் அவமானமும் குற்ற உணர்வும் மூடிய கதவின் பின் கரைந்தன.

படிஇறங்கும்போதே ரவி எதிரில் வந்தான். "அய்யரு வந்து பத்து நிமிஷமாகக் காத்துக் கிட்டிருக்காரு. கூப்பிட வந்தேன்..."

குற்ற உணர்வுடன் தன்னைப் பார்க்கத் திராணியற்று வேறெங்கோ நோக்கும் தாயைப் பார்த்தான்.

"அவரை உட்காரச் சொல்லி, தவிசுப் பிள்ளையிடம் காப்பி கொடுக்கச் சொன் னேன்" என்று சகஜமாகச் சொல்லிவிட்டு நகர்ந்துவிட்டான்.

இன்பமாக விடிந்திருந்த காலைப் பொழு தின் பிரதிபலிப்பாக அய்யருக்கு வெற்றிலை, பாக்கு, அரிசி வேஷ்டியுடன் நூறு ரூபாயும் கிடைத்தது. "என்ன இருந்தாலும் உங்க பெரிய மனசு யாருக்கு வரும்?" என்று பிரு கஸ்பதி குறுகி நின்றார்.

ஆபீஸுக்குக் கிளம்பும்போது சரஸ்வதி யைக் கூப்பிட்டார் நரசிம்மன். "இன்னிக்கு ஏழாந் தேதி பார். மறக்காம நம்ம தவிசுப் பிள்ளை, தோட்டக்காரன், வேலைக்காரன் மூணு பேரையும் நாலரை மணிக்குத் தொழிற் சாலைக்கு வரச் சொல்."

"சரிங்க."

"ஏன் டாடி! அய்யருக்கும் ஆபீஸ் கணக் கில் பணம் தர முடியாதா? 'பாக்டரி ப்ரீஸ்ட்' என்று?" நிரு குலுங்கக் குலுங்கச் சிரித்தாள்.

"டோண்ட் வரி. அப்பா அதை வேறு எங்காவது எக்ஸ்பென்ஸ் அக்கௌண்டில் சேர்த்து விடுவார்." ரவி அவளுக்குப் பதி லளித்தவாறு ஸ்கூட்டரை ஸ்டார்ட் செய் தான்.

எக்ஸிக்யூடிவ் டைரக்டர் என்ற முறையில் இரண்டு வேலைக்காரர்களை அமர்த்திக்கொள் ளும் சலுகை இருந்தும், அதனால் வரும் வரித் தொந்தரவைத் தவிர்க்க வீட்டு வேலைக்காரர் களுக்கு பிட்டர், டர்னர், வெல்டர் என்று தொழிற்சாலையில் சம்பளம் கொடுப்பது பலர் அறிந்தும் கண்ணை மூடிக் கொண்ட விஷயம்.

நரசிம்மன் ஆபீஸிலிருந்து கிளம்பும் சமயத்தில் அவருடைய பிரத்தியேக காரிய தரிசி அவருக்குப் போன் கால் வந்திருப்ப தாக அறிவித்தாள்.

தேர்ந்தெடுங்கள் இதோ, புதுமையாக மலரும்
கோலாகல டிசைன்களின் வரிசை.



கட்டாவ்

பெரிகோஸா சேலைகள்

'டெரீன்'

Creative Unit-A 2427-Tam.

பாபு: மளிகைக் கடை செட்டியார் பொம்மைக்குப் பக்கத்தில் என்ன எழுதி வைச்சிருக்கே?

ஸ்ரீதர்: விலைப் பட்டியல். —ல. செ.



''ஹலோ மிஸ்டர் நரசிம்மன், நான் உங்கள் மகன் ரவியின் டிபார்ட்மெண்ட் தலைவர் குப்தா பேசுகிறேன்.''

''வணக்கம் குப்தா! நான் இதுவரை உங்களைச் சந்தித்ததில்லை என நினைக்கிறேன்.''

''உண்மைதான். ஆனால் நாம் கட்டாயம் சந்தித்தே ஆக வேண்டும். ரவியைப் பற்றி உங்களிடம் விவரமாகப் பேச வேண்டும்.''

''ரவியைப் பற்றியா? வாட் சஸ் ராங் வித் ஹிம்?''

''மிஸ்டர் நரசிம்மன், நீங்கள் நினைப்பது போல் பதற்றப்படக் கூடிய விஷயமில்லை இது. டெலிபோனில் பேச முடியாது. ஆறு மணிக்கு என்னைச் சந்திக்க முடியுமா?''

''கட்டாயம் உங்களை உங்கள் கல்லூரி வாயிலில் ஆறு மணிக்குச் சந்திக்கிறேன். நன்றி.''

'ரவியைப் பற்றிப் பேச என்ன இருக்க முடியும்? இந்த வருடம் படிப்பு முடிந்ததும் அவனை அமெரிக்காவுக்கு அனுப்பி எம். ஐ. டி.யில் மேல் படிப்புப் படிக்க வைக்க வேண்டும் என விரும்புகிறேன். அவன் அறிவுக்கும் ஆற்றலுக்கும் நிச்சயமாக எங்கே போனாலும் சுடர் விடுவான். ஏதாவது காதல் விவகாரமா? அப்படி இருந்தாலும் என்னிடம் நேரிலேயே சொல்லி விருக்கலாமே? திரு தொழிலதிபர் நாகலிங்கம் பிள்ளையின் மகள் பாஸ்கருடன் அதிகம் பழகுகிறான் என்று தெரிந்தும்கூட உண்மைக் காதலுக்கு ஜாதி, மத வித்தியாசமோ, பெற்றோரின் மறுப்போ தடையாக இருக்கக் கூடாது என்றுதானே காதல் மணமாகும் சூழ்நிலையையே உருவாக்கித் தருகிறேன்?' ரவி ஏன் என்னிடம் எதையும் மறைக்க வேண்டும்?'' நரசிம்மன் குழம்பினார்.

மிஸ்டர் குப்தா சொன்ன விஷயத்தைக் கேட்டவுடன் அவர் அதிர்ந்து விட்டார். ''நீங்கள் சொல்வது உண்மைதானா?'' அவர் உடலின் ஒவ்வொரு அணுவும் குலுங்கியது. இது எப்படி நடக்க முடியும்?

''உங்கள் பிள்ளை படிப்பில் அதி கெட்டிக்காரன். ஒப்புக் கொள்கிறேன். விளையாட்டில் மன்னன்தான்.. ஆனாலும் வாழ்வில் சரி, தவறு என்று பகிர்ந்துரைக்கும் 'வால்யூஸ்' இல்லையே. அதனால் துளிர்த்துத் தழைவிட வேண்டிய தளிர் வாடுவதைப் பார்க்க முடியாமல்தான் உங்களிடம் சொல்கிறேன். நீங்கள் பதற்றப்படாமல், அவனுக்கு ஏதாவது மனோதத்துவ ரீதியான காம்ப்ளெக்ஸ் இருக்கிறதா என்று பாருங்கள்.''

''அவனுக்கு என்ன காம்ப்ளெக்ஸ் இருக்க முடியும்? அவனுக்கு நான் பண்பையும், அறிவையும், மரபையும் ஊட்டி விருக்கிறேன். எத்தனை மனோதத்துவப் புத்தகங்கள் படித்திருப்பேன்? இன்னும் அவனுக்கு எந்தப் பிரச்னை இருந்தாலும் தந்தையாக இல்லாமல், தோழனாக அவனிடம் விவாதிக்கிறேன். எனக்கு ஒன்றும் புரியவில்லையே புரொபஸர்?'' நரசிம்மன் இடிந்து விட்டார்.

''ரவி இத்தனை நேரம் வீடு சேர்ந்திருப்பான். பரீட்சைக்குப் படிப்பதற்காக நண்பர்களுடன் ஹாஸ்டலில் தங்கி இருந்தவன் ஹெரோயின் போதையில் நினைவிழந்து கிடந்ததோ, டாக்டர் அவன் ஓர் 'அடிக்ட்' என்று சொல்லிச் சிகிச்சை அளித்ததோ தெரியாதது மாதிரி நடியுங்கள். பரீட்சைக்குப் பத்து நாட்கள் கூட இல்லை. நீங்கள் கண்டித்தால் அவன் கட்டாயமாக எதிர்ப்பான். ஒரு வருடம் வீணாகி விடும். அவனுக்குத் தரும் பணத்தைக் குறையுங்கள். படிப்பில் ஆர்வத்தை ஊட்டுங்கள். இந்த நிலையில் அவ்வளவுதான் நாம் செய்ய முடியும்.''

''புரொபஸர், நான் அதிகம் குழந்தைகளுக்குப் பாக்கெட் மணி தருவதே இல்லை. அதுவும் மாத முடிவில் குடும்பத்தில் அனைவரும் ஒன்று கூடிக் கணக்கெழுதி, எந்தச் செலவு நியாயமானது, எதைக் குறைத்திருக்கலாம் என்று விவாதிப்போம்.''

''நான் உங்களைக் குறைகூறவில்லை மிஸ்டர் நரசிம்மன். நீங்கள் ஒரு லட்சியத் தந்தையாகத்தான் இருக்கிறீர்கள். ஆனால் மாதம் இருநூறு ரூபாய்க்கு மேல் போதைப் பொருளில் செலவழிக்க அவனுக்கு எங்கிருந்து பணம் வருகிறது?''

''அதுதான் எனக்கும் புரியவில்லை.''

நரசிம்மன் கனக்கும் இதயத்துடன் வீடு வந்து சேர்ந்தபோது, ரவி வெளியே கிளம்பிக் கொண்டிருந்தான். அவன் முகத்தில் வாட்டமோ, குற்ற உணர்வோ இம்மியும் இல்லை.

''எப்போது ரவி ஹாஸ்டலிலிருந்து வந்தாய்?''

''ஐந்து மணிக்கு.''

''நன்றாகப் படித்தாயா?''

''ம்...ம்.''

நரசிம்மன் பெருமூச்சுடன் வீட்டினுள் நுழைந்தார். ரவி அவரைத் தொடர்ந்தான்.

''டாடி, நான் காரைஎடுத்திட்டுப் போகட்டுமா, மாம்பலம் வரைதான்.''

''ஓ. கே.''

காரை எடுத்துச் செல்லும் ரவியை ஏமாற்றத்துடனும் ஏக்கத்துடனும் பார்த்தார். ஆறு வயதில் நீச்சல் குளத்தருகில் அவர் கையை இறுகப் பற்றிக் கொண்டு, ''நான் தண்ணீரில் இறங்கமாட்டேன். மூழ்கி விடுவேன்'' என்று சண்டித்தனம் செய்த இவனா, இன்று ஆளையே மூழ்கடிக்கும் போதைப் பொருட்களில் நீந்தியும், மிதந்தும் களிக்கிறான்?

''ஏங்க என்னவோ போல் இருக்கீங்க?''

''ஒன்னுமில்லை, ஸரஸு. மனசே சரியில்லை.''

''ஆபீஸிலே வேலை அதிகமா?''

''ம்...ம்.''

திரு பாஸ்கரை அழைத்து வந்தாள். பாஸ்கரின் வரவில், நரசிம்மன் ரவியைப் பற்றிச்



''நான் தப்புத் தாளம் போட்டால், என் தலையில் நீ எத்தனை குட்டு வேண்டுமானாலும் குட்டலாம்; நயினா!''.

---

சிறிது நேரம் மறந்தார். பாஸ்கர் 'எக்ஸைஸ்' வரிக் குறைப்பைப் பற்றிப் பேசினான். நரசிம்மன் அவனது கண்ணியத்தையும் வியாபாரத் திறமையையும் மனதார மெச்சிக் கொண்டார். நிரு, பாஸ்கருக்கு ரிகார்ட் போட்டுக் காட்டினாள். சிற்றுண்டி அளித்தாள். பத்தே நிமிடங்களில் திரும்பி வந்த ரவியும் பேச்சில் அவர்களுடன் கலந்து கொண்டான். பாஸ்கர் கிளம்பும்போது ''நானே உன்னை ட்ராப் செய்து விடுகிறேன்'' என்று அவன் மறுப்பையும் பொருட்படுத்தாமல் கிளம்பினார் நரசிம்மன்.

காரை ஸ்டார்ட் செய்யும்போது அவர் விழிகள் பெட்ரோல் அளவுகோலின் மேல் படிந்தது. வீட்டுக்கு வரும் வழியில்தான் முழு டாங்க் பெட்ரோல் போட்டார். இப்போது ரிஸர்வ்வுக்கு அருகில் நிற்கிறதே! ரவி பத்து நிமிடங்களில் எவ்வளவு சுற்றியிருந்தாலும் இரண்டு லிட்டருக்கு மேல் செலவழிந்திருக்காதே?

இடீரென அவர் முன் ஒரு முடிச்சவிழ்ந்தது. ஒரு மாபெரும் உண்மை புலனாயிற்று. ரவி காரிலிருந்து பெட்ரோல் எடுத்திருக்கிறான். ட்யூப் போட்டு உறிஞ்சி எந்த டாக்ஸி டிரைவரிடமோ விற்றிருக்கிறான். தற்போது பெட்ரோல் விற்கும் விலையில் ஒரு நாளைக்கு இரண்டு லிட்டர் பெட்ரோல் எடுத்தால்கூட மாதம் இருநூறு ரூபாய் ஆயிற்றே?''

''ரவி...'' வீட்டுக்குள் நுழையும்போதே நரசிம்மனின் குரல் கர்ஜனையாய் ஒலித்தது.

''என்னப்பா?''

''காரை எங்கே எடுத்துக் கொண்டு போனாய்?''

பதிலில்லை.

''பெட்ரோல் எடுத்தாயா?''

ரவி தைரியமாக நிமிர்ந்தான். ''யெஸ். ஒவ்வொரு சமயம் ஸ்கூட்டருக்குப் பெட்ரோல் தேவைப்படும்போது காரிலிருந்து உறிஞ்சிப் போட நீங்கள் அனுமதித்ததில்லையா?''

''அது வேறு விஷயம். நீ இப்போது ஸ்கூட்டருக்குப் போடவில்லை. விற்றிருக்கிறாய்.''

''தட் ஈஸ் கரெக்ட். ஆனால் இரண்டுக்கும் என்ன வித்தியாசம்?'' ரவி கோபாவேசமாக நிற்கும் தந்தையை நிமிர்ந்து பார்த்தான். ''ஆப்டர் ஆல், இது என்ன உங்கள் சொந்தப் பணத்தில் வாங்கிய பெட்ரோலா? தவிசுப் பிள்ளை, தோட்டக்காரன், மாதிரி இதுவும் ஒரு கம்பெனிக் கணக்கு. அவ்வளவுதானே? கவலைப்படாதீர்கள்.''

பிரமை பிடித்தாற்போல் நிற்கும் தந்தையைத் தாண்டிக் கொண்டு நிதானமாக அலட்சியமாக மாடி ஏறினான் மகன்.

நிம்மதியற்ற மனத்துடன் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தவரை மெல்ல வருடினாள் சரசு.

',நீங்களே மனசு நிம்மதியில்லாமல் தவிக்கிறீங்க. உங்களிடம் எப்படிச் சொல்றதுன்னு தெரியல்லை. சொல்லாமலும் இருக்க முடியலை.''

''என்ன ஸரஸி?''

''சாயங்காலம் ரொம்பத் தலைவலியாக இருந்தது. தலைவலி மாத்திரை நிருவிடம் இருக்கும் என்று அவள் அறையில் பார்த்தேன். எனக்கு எப்படிச் சொல்றதுன்னு தெரியலீங்க.'' சரஸ்வதி விசித்து விசித்து அழ ஆரம்பித்தாள்.

''கலங்காமல் சொல்லு சரஸு, என்ன ஆச்சு?''

''அவ டிராயரிலே... அடியிலே... கர்ப்பத் தடை மாத்திரை பாதி தீர்ந்த பாக்கெட் இருந்ததுங்க. நம்ம பெண் இந்த மாதிரி செய்யுமாங்க? எனக்குத் தாங்கலீங்க. போன வாரம் முழுகியதிலேருந்து கணக்கா அந்த மாத்திரை சாப்பிட்டிருக்கா. நீங்கதான் என்னவோ பாஸ்கருடன் இவ்வளவு பழக விட்டீங்க? இந்த வயசிலே பஞ்சும், நெருப்பும் மாதிரி. பத்திக்கிட்டாலும், ஊர் தெரியாம இருக்கப் பிள்ளைங்க கத்துக்கிட்டாங்க. கல்யாணத்துக்கு முன்னே அப்படியா? படிச்ச பொண்ணு எப்படிங்க மனசு ஒப்பி இந்தக் காரியம் செய்யறா?'' புலம்பிப் புலம்பி அழும் மனைவியைச் செய்வதறியாது பார்த்தார் நரசிம்மன்.

''ஸரஸு, வீணு மனசை நோகடிச்சுக்காதே. அவளுக்கு இத்தனை மத நூல்களைப் படிச்சும், தத்துவம் புரிஞ்சுண்டும் கூட சரி, தவறு எதுன்னு விளங்கல்லேன்னு நினைக்கிறேன். நீ நிருவுடன் பக்குவமாகப் பேசிப் பார். சீக்கிரமாக் கல்யாணத்தைச் செஞ்சுப்புடலாம். அப்புறம் படிக்கட்டும்.''

''நான் எந்த வாயை வைத்துக்கொண்டு பேசுவேன்? இப்பத்தான் உங்க பிள்ளை உங்களைக் கேட்டுவிட்டுப் போகிறான், பகிரங்கத் திருட்டைக் கம்பெனிக் கணக்கிலே எழுதுவதுதானே என்று. பெண் என்னைப் பார்த்துக் கேட்க வேண்டியதுதான் பாக்கி, 'பட்டப் பகலில், சுற்றம், சூழல் பாராது சபலத்துக்குச் சோறு போடும் நீங்கள் கட்டுப்பாடு பற்றி எனக்கு வாத்தியாரா?' என்று.''

''நான் என் குழந்தைகளுக்கு அறிவைக் கொடுத்தேன் சரஸு. பழகும் கலை கற்பித்தேன். திறமையைச் செதுக்கினேன். ஆனால் 'மாரல் வால்யூஸ்' வழிமுறை, வழிமுறையாக வரும் பிதுரார்ஜித சொத்துத்தானே? அந்தச் சொத்தை நான் மனதாரக் கறுப்புப் பணமாக அல்லவா சேர்த்து விட்டேன். நான் என் குழந்தைகளிடம் எப்படிக் கணக்குக் கேட்பேன்?'' என்று மனைவியுடன் சேர்ந்து குழந்தை போல் மனம் விட்டு அழுதார் நரசிம்மன்.



சென்னை, ஹிக்கின்பாதம்ஸ் லிட்டின், டைரக்டர் & மானேஜருமான ஸ்ரீ வி. பலராமன் அவர்கள் குமாரன் சிரஞ்சீவி **B. ரமேஷுக்கும்** சென்னை ஸ்ரீ ஆர். வெங்கட்ராமன் அவர்கள் குமாரத்தி சௌபாக்யவதி **சித்ராவுக்கும்** சமீபத்தில் சென்னையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்

## மகாராஜபுரம்

# ஸ்ரீ விஷ்ணு துர்காம்பிகாவுக்கு

## லக்ஷார்ச்சனை

மகாராஜபுரம் கிராமத்தில் ஸ்ரீ துர்வாஸ மகரிஷியினால் பிரதிஷ்டை செய்யப்பட்டு பக்தர்களுக்கு இஷ்ட சித்திகளை அருளிவரும் **ஸ்ரீ விஷ்ணு. துர்கா பரமேஸ்வரிக்கு** ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகளின் ஆணைப்படி 24-9-76 முதல் 2-10-76 வரை லட்சார்ச்சனை நடைபெற இருக்கிறது. அதையொட்டி விஜயதசமி அன்று ஸ்ரீ பரமேஸ்வரிக்கு மகாபிஷேகமும் நடைபெறுகிறது. பக்தர்கள் அனைவரும் இதில் கலந்து கொண்டு லட்சார்ச்சனை வைபவத்தை தரிசித்து ஸ்ரீ விஷ்ணுதுர்கா பரமேஸ்வரியின் கருணைக் கடாக்ஷத்தைப்பெற பிரார்த்திக்கின்றோம்.

**அர்ச்சனை ஒன்றுக்கு ரூ. 10/-**

**லட்சார்ச்சனைக் கமிட்டியார் &**
**M. S. ராமமூர்த்தி.** டிரஸ்டி

பணம் அனுப்ப வேண்டிய முகவரி :

**ஸ்ரீ G. ராமச்சந்திரன்**
**மகாராஜபுரம், திருவாலங்காடு-609810**

# ஜான்ஸன்ஸ் வழங்குகிறார்கள்
# பல-பயனுள்ள cotton bud



## இதோ அதன் உபயோகங்கள்



மேக்-அப்பை சீராக்குகிறது அல்லது நீக்க உதவுகிறது.



நுட்பமான ஹை-ஃபை சாதனங்களை சுத்தம் செய்கிறது.



குழந்தையின் மூக்கை சுத்தம் செய்கிறது—நன்கு, மென்மையாக.



சிறிய காயங்களின் மீது மருந்தை ஒற்றி எடுக்க உதவுகிறது.



காதுகளை பத்திரமாக சுத்தம் செய்கிறது—குழந்தையின் காதுகளையும் உங்கள் காதுகளையும்.

ஜான்ஸன்ஸ் Cotton Bud-ஐ இன்னும் எத்தனையோ வழிகளில் நாள்தோறும் உபயோகிக்கலாம். உங்கள் வீட்டில் எப்பொழுதும் ஜான்ஸன்ஸ் Cotton Bud இருக்கட்டும்.

**அது சுத்தமானது • பத்திரமானது.**
**சுகாதாரமானது • சௌகரியமானது.**




புதிது !
வளையக்கூடிய
பிளாஸ்டிக் தண்டு

**பத்திரமாக சுத்தம்**
**செய்வீர்- ஜான்ஸன்ஸ்**
**Cotton Bud—ஆல் சுத்தம் செய்வீர்**

# நீல் வண்ணக் கண்ணிலே!

## குட்மார்னிங் டாக்டர்!

கண்ணிலே
அறுவைச் சிகிச்சை

சபாபதிக்கு வயது 54. அரசு அலுவலகத்தில் பணியாற்றும் அவர் கூறினார்: ''இன்று நான் ஆபீசிலிருந்து வீடு திரும்பும்போது, பஸ்ஸிலிருந்து கீழே இறங்கியதும் கண்ணெதிரில் பல வண்ணங்கள் தெரிந்தன. வானவில்லில் காணப்படும் வண்ணங்கள் தெரிந்தன. என் கண்ணில் ஏதோ கோளாறு என்று தோன்றியது. உடனே இங்கே வந்தேன்....''

நாற்பது வயது முதல் சாளேசுவரத்துக்கென்று கண்ணாடி அணிந்து வரும் சபாபதியின் வலது கண்ணின் அழுத்தத்தின் அளவை 'டோனோமீட்டர்' என்ற கருவியைக்கொண்டு ஆராய்ந்தேன். இயல்பாக இருக்க வேண்டிய அழுத்தத்தை விட அவருடைய கண்ணுள் அழுத்தம் கூடுதலாக இருந்தது. பின்னர் இடது கண்ணையும் சோதித்தேன். அவருக்குக் கண்ணில் 'க்ளாகோமா' என்ற நோய் ஏற்பட்டுள்ளது தெரிந்தது. ஆரம்ப நிலைதான். அவருக்கு மருந்து எழுதிக் கொடுத்து, ''மிஸ்டர் சபாபதி! கண்ணில் தினமும் சில சொட்டுக்கள் இந்த மருந்தை விட்டுக் கொள்ள வேண்டும். இரண்டாவது மருந்து உள்ளுக்குச் சாப்பிட. இவற்றைத் தினமும் — ஒரு நாள் கூடத் தவறாமல் உபயோகித்து வரவேண்டும்'' என்றேன்.

'' எத்தனை நாட்களுக்கு டாக்டர் ?''

''ஆயுட் காலத்துக்கும்தான்! உங்கள் நோய் Narrow Angle Glaucoma எனப்படும். நீங்கள் நல்ல வேளையாகத் தாமதிக்காமல் வந்தீர்கள். தாமதித்துச் சில மாதங்கள் கழித்து வந்திருந்தால் உங்களுக்கு 'அட்டாக்கே' வந்திருக்கக் கூடும். அப்படி வந்தால் பொறுக்கமுடியாத கண்வலி, தலைவலி ஏற்படலாம். கண்கள் சிவந்து விடும். வாந்தி எடுக்கும். நல்ல வேளை உங்களுக்கு நோய் முற்றவில்லை'' என்று கூறி அவரை அனுப்பி வைத்தேன்.

**''முற்றிய நிலையில் நோயைக் குணப்படுத்த முடியாதா?''**

''மருந்துகளால் ஓரளவு கட்டுப்படுத்த முடியும். ஆனால் ஒரு சிறிய ஆபரேஷன் செய்து கொண்டால் நிரந்தர குணம் ஏற்படும். ஆயுட்காலத்துக்கு மருந்து சாப்பிட வேண்டிய நிர்ப்பந்தத்தைத் தவிர்க்கலாம்.''

**''க்ளாகோமா என்றால் என்ன? அந்த நோய் வரக் காரணம் என்ன?''**

''கண்ணின் வெளிப்புறத்தில் உள்ள 'கார்னியா'வுக்கும் உள்ளே இருக்கும் 'லென்ஸு'க்கும் இடைப்பட்ட பகுதியில் ஒரு திரவப் பொருள் இருக்கிறது. இது தூய்மையாகப் பளிங்கு போல் இருந்தால்தான் பார்வையும் தெளிவாக இருக்கும். இந்தத் திரவம் அப்படியே அசையாமல் தேங்கி நிற்பதன்று. இதற்கும் ஓட்டம் உண்டு. குறிப்பிட்ட அளவு இதற்கு அழுத்தம் உண்டு. இந்தத் திரவம் vein எனப்படும் அசுத்த இரத்தக் குழாய்க்குள் செல்வது தடைப்பட்டால் அழுத்தம் கூடுதலாகும். அப்படி அழுத்தம் கூடுதலாவதன் விளைவுதான் க்ளாகோமா. கோணம் குறுக (Narrow Angle) என்ன காரணம் என்பதைத் திட்டவட்டமாகக் கூறுவதற்கில்லை.

''இன்னொரு வகை open angle glaucoma எனப்படும். இது வரும்போது இனம் விளங்காத தலைவலி இருக்கும். பார்வை இலேசாக மங்கிப் போகும். சிலருக்கு நேர் எதிரில் வருகிறவர்களை மட்டும் பார்க்க முடியும். பக்கத்தில் வருபவர்கள் தென்படமாட்டார்கள். இருவகை க்ளாகோமாவும் அநேகமாக ஐம்பது வயதுக்குப் பிறகுதான் வரும்.

'' 'காடராக்ட்' எனப்படும் கண் உபாதையை விட இது கொடிய நோய். இதனைச் சிலர் 'காடராக்ட்' எனத் தவறாக எண்ணி அலட்சியம் செய்து சிகிச்சை செய்து கொள்ளாமல் இருந்து விடுவதால் நிரந்தரமாகப் பார்வை இழக்க நேரிடுகிறது. ஆகவே உடனடி சிகிச்சை அவசியம்.''

**''அறுவைச் சிகிச்சையினால் கண் பூரண குணம் அடைய முடியுமா?''**

''நிச்சயமாக முடியும். கண்ணில் அழுத்தம் அதிகமாவதற்குக் காரணமான திரவம், vein எனப்படும் இரத்தக் குழாயில் போய்ச் சேருவதற்கு உதவும் வகையில் ஒரு சிறு துவாரம் செய்வதுதான் இதற்கான அறுவைச் சிகிச்சை. பிறக்கும்போதே சிலருக்கு க்ளாகோமா நோய் இருக்கலாம். பிறவியிலேயே இது இருந்தால் அறுவைச் சிகிச்சை தேவை.''

**லெப். கர்னல் எஸ். அண்ணுசுவாமி கூறக் கேட்டு எழுதியவர் ஆர். பி.**

# படித்தோம்

## ஸ்ரீராமகிருஷ்ண கதாமிருதம்

'ஜோதி ரூபமான இறைவனின் செம்மையை நான் பார்க்கப் புறப்பட்டேன். எங்கும் அவன் செம்மை ஓடியிருந்தது. என்னைப் பார்க்கும்போது நானுமே சிவந்து ஜோதி உருவாகி யிருந்தேன்' என்று பொருள்படக் கபீர்தாசர் பாடுகிறார்.

ஸ்ரீ மகேந்திரநாத குப்தர் என்பவர் சிறந்த கல்விமான். இவ்வுலகம் கூறும் கல்வி – கேள்விகளில் தேர்ச்சி பெருத மகான் ராமகிருஷ்ணரைக் காணச் சென்றார். அவரது கல்வியின் ஆழத்திலும் அநுபவ ஞானத்திலும் மெய்ம்மறந்து அவர் அடியாராகி நின்றார். பாரத வேதாந்தம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் உருவில் வந்து அருவத்தின் பெருமையையும் உருவத்தின் வளமையையும் உதாரணம் காட்டி எளிய சொற்களில் எப்படியெல்லாம் விளங்க வைக்கிறது என்பதைக் கண்டார்.

தாம் பெற்ற இன்பம் இவ்வையமும் பெற வேண்டும் என்ற பெருநோக்கோடு 'ம' என்னும் ஒற்றை எழுத்தைப் புனைபெயராகக் கொண்டு ஐந்து பாகங்கள் எழுதியுள்ளார்.



அமிர்தமான கதைகளைக் கூறிய பகவான்

வங்க மொழியில். அதன் முதல் பாகமே இப்பொழுது தமிழில் வெளியாகியுள்ளது. இதைத் தமிழ்ப்படுத்தியுள்ளவர் சுவாமி தன்மயானந்தர். அவர் எப்படித் தன்மயமாகி இந்த நூலைத் தமிழில் தந்துள்ளார் என்பதற்கு இதோ ஒரு சில உதாரணங்கள் :

'எவரை ஞானிகள் 'பிரும்மம்' என்று சொல்கின்றனரோ, அவரை யோகிகள் 'ஆத்மா' என்றும், பக்தர்கள் அவரையே 'பகவான்' என்றும் சொல்கிறார்கள்.'

இதைத் தெள்ளத் தெளிய விளங்க வைக்க ஸ்ரீராமகிருஷ்ணர் கூறும் உவமை:

'ஒரு பிராம்மணன் பூஜை செய்யும்போது அவனைப் பூஜாரி என்றும் சமையல் செய்யும் பொழுது சமையற்காரன் என்றும் சொல்கிறோம்.'

எங்கும் நிறை 'பிரும்மம்' ஓர் இனத்துக்கோ மதத்துக்கோ மட்டுமோவா சொந்தம் ?

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் அதை அகிலத்துக்கும் பொதுவாக்கும் அழகைப் பாருங்கள் :

'ஒரு குளத்துக்கு மூன்று நான்கு படித்துறைகள் உள்ளன. ஒரு படித்துறையில் ஹிந்துக்கள் தண்ணீர் குடிக்கிறார்கள்.... அவர்கள் 'ஜலம்' என்கிறார்கள். மற்றொரு படித்துறையில் முஸல்மான்கள் தண்ணீர் குடிக்கிறார்கள். அவர்கள் 'பானி' என்கிறார்கள். மற்றொன்றில் ஆங்கிலேயர்கள் தண்ணீர் குடிக்கிறார்கள். அவர்கள் 'வாட்டர்' என்கிறார்கள். மூன்றும் ஒன்றுதான். பெயரளவில்தான் வித்தியாசம். இறைவனைச் சிலர், 'அல்லா' என்கிறார்கள். மற்றும் சிலர், 'காட்' என்கிறார்கள். வேறு சிலர் 'பிரும்மம்' என்கிறார்கள்.'



மொழிபெயர்ப்பாளர் சரஸ்வதி ராம்நாத்

இப்படிப் பாமரருக்கும் பரம்பொருளை விளங்க வைக்கும் கலை பகவான் ஸ்ரீராமகிருஷ்ணருக்குக் கைவந்த கலை என்பதை நூல் முழுவதும் பரவலாகக் காணலாம்.

நூலின் முன்னுரையில் கூறியதுபோல், கதாமிருதத்தை ஒரு முறை படித்துவிட்டு, படித்து முடித்துப் பழையதாய்ப் போன புத்தகக் குவியலில் ஒருநாளும் சேர்த்துவிட முடியாது.

–ரா. வீ.

பிரசுரம்: ஸ்ரீராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை 600004. விலை: ரூ. 15.00.

## ராதிகா

ராதிகா ஒரு தனிப் பிறவி. தன்னிச்சையில் செயல்பட விரும்பும் மன உறுதியும், அதே சமயத்தில் நேர்மையிலிருந்து ஒரு சிறிதும் பிறழாத தனித் தன்மையும் உடையவள் ; உணர்ச்சி வசப்படுபவளும்கூட. தான் நினைத்ததையே சாதிக்கும் குணம்; துளிக்கூடப் பிறருக்காகத் தன் போக்கை மாற்றிக் கொள்ள மாட்டாள் – இந்தச் சுபாவம்தான் அவளை மற்றவர்களிடமிருந்து சற்றுப் பிரித்து வைத்திருந்தது. அம்மாவைச் சிறு வயதிலேயே இழந்துவிட்ட ராதிகா, தகப்பனாரிடம் அளவுகடந்த பாசம் வைத்திருந்தாள். அவள் எம். ஏ. படித்துக் கொண்டிருந்த போது அவள் தந்தை, வித்தியாவை மறுமணம் செய்து கொண்டதை ராதிகாவினால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை..... அதற்குப் பிறகு அவள் அமெரிக்கா சென்றது, பத்திரிகையாளனை டேனியலோடு பழகியது, அங்கே தன் படிப்பைத் தொடர்ந்தது – எல்லாமே அவளையும் மீறி நடந்த செயல்கள். ராதிகா ஐந்தாண்டுகளுக்குப் பின்னர் தாய்நாடு திரும்புகிறாள். அப்புறம் அவள் மனப் போராட்டங்கள்.....

ராதிகா ஒருத்தியையே சுற்றிப் படர்ந்து வரும் இந்நாவல், அவளது மனப் போராட்டங்கள், மன நெகிழ்ச்சிகள், மனக் குமுறல்கள் இவைகளை வைத்துக் கொண்டே நல்லதொரு சுவையான கதையை விறுவிறுப்பாகச் சொல்கிறது. ராதிகாவின் தன்னிச்சையான போக்கே அவளுக்கு இடைஞ்சலாகவும் வந்து சேர்கிறது!

உஷா பிரியம்வதாவின் ஹிந்தி நாவலின் தமிழாக்கம் இது. அவர் விஸ்கான்சின் பல்கலைக் கழகத்தில் இந்திய இயல்துறையில் இப்போது பணி புரிகிறார். இவரது நல்ல நாவல் ஒன்றைத் தேர்ந்தெடுத்துத் தமிழாக்கம் செய்திருக்கும் ஸ்ரீமதி சரஸ்வதி ராம்நாத் அவர்கள் தமிழ் உரைநடை இலக்கியத்துக்கு அருமையான பணியாற்றியிருக்கிறார். மொழிபெயர்ப்பு வாடையே வீசாமல் தம் பணியைச் செவ்வனே செய்திருக்கிறார்.

—ஸோமாஸ்

பிரசுரம்: தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம், லிமிடெட், 8, சின்னரெட்டித் தெரு, எழும்பூர், சென்னை — 8; விலை: ரூ. 6.00.

## காமராஜ் — ஒரு சரித்திரம்

''பக்தர் சொன்னவும் பித்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ'' என்றார் கவிச் சக்கரவர்த்தி. ஒருவர் பக்தியினால் உந்தப்பட்டு ஒரு விஷயத்தை எழுதிவிட்டால் அது ஆராய்ச்சிக்கும் விமரிசனத்துக்கும் சீர்தூக்கிப் பார்ப்ப

# சொல்கிறோம்!

தற்கும் அப்பாற்பட்ட விஷயமாகிவிடுகிறது. இந்நூல் ஆசிரியர் முருக தனுஷ்கோடி, தலைவர் காமராஜ் அவர்களுடன் சிறு வயது முதல் நெருங்கிப் பழகி வந்தவர். இந்தப் புத்தகத்தின் நுழை வாயிலிலேயே ''தெய்வத்துக்கு அடுத்துத் தலைவர் காமராஜை நான் போற்றி வணங்குபவன்'' என்கிறார். இந்தப் பக்தி புத்தகம் நெடுகிலும் காண முடிகிறது. இதன் விளைவாகக் காமராஜரின் சில அரிய பண்புகளைக் காண முடிகிறது. அதே நேரத்தில் விமர்சனம் செய்வது சிரமமாகிறது.



படத்தின் குழப்பம் கதைகளில் இல்லை !

ஒரு சமயம் காமராஜரின் தாயார், தமக்குக் காமராஜ் ரால் அனுப்பப்பட்டு வந்த மாதச் செலவுத் தொகையை நூற்றி இருபதிலிருந்துநூற்று ஐம்பதாக உயர்த்தும்படி கோரினாராம். இதற்கு அவர் கூறிய காரணம்: ''மகன் சென்னையில் முதல் மந்திரியாக இருப்பதால் யார் யாரோ வருகிறார்கள். சிலருக்குத் தமிழ் கூடப் பேசத் தெரியவில்லை. என்னென்ன பாஷையோ பேசுகிறார்கள். அப்படி என்னைப் பார்க்க வருகிறவர்களுக்கு ஒரு சோடா கலர் கொடுக்காமல் எப்படி அனுப்புவது?''

இதற்குக் காமராஜ், ''யார் யாரோ பார்க்க வருவார்கள். உண்மைதான். வரக்கூடியவர்கள் சோடா கலர் கேட்கிறார்களா! அவர்களுக்கு ஒன்றும் கொடுக்க வேண்டாம். தவிர, கொஞ்சம் ரூபாய் போய்ச் சேர்ந்தால் அம்மா எங்காவது கோயில் குளம் என்று போய்விடுவார். வயதான காலத்தில் வெளியூர் போவது நல்லதல்ல. ஆகவே இப்போது கொடுத்துவரும் 120 ரூபாயே போதும்'' என்று சொல்லிவிட்டார்.

பெற்ற தாயாரிடம்கூட எவ்வளவு தயவு தாட்சிண்யம் காட்டாமல் பழகி வந்தார் காமராஜ் என்பதனை மேற்கண்ட சம்பவம் விளக்குகிறது. இவ்விஷயம் அணுக்கத் தொண்டர் போல் இருக்கும் ஒருவருக்கன்றி வேறு யாருக்குத் தெரிய முடியும்?

ஆனால் இந்தச் சரித்திரத்தில் ராஜாஜி — சத்தியமூர்த்தி தொடர்பு பற்றியும் ராஜாஜி — தமிழக காங்கிரஸ் இடையில் 1945—46 ஆண்டுகளில் ஏற்பட்ட தகராறுகள் பற்றியும்



சரித்திர புருஷர்

வந்துள்ள பகுதிகள் மிகவும் வேதனை தரக்கூடிய பகுதிகள்.

இவ்வளவுக்கும் ராஜாஜியிடம் ஆசிரியருக்குள்ள மதிப்புக்கும் மரியாதைக்கும் ஒரு குறைவும் இல்லை என்பது அவருடைய கீழ்க்கண்ட வாக்கியங்கள் மிகத் தெளிவாகச் சுட்டிக்காட்டுகின்றன:

'' ராஜாஜியைப் பற்றிச் சற்று அதிகமாகவே எழுதிவிட்டேன். அவரைப் பற்றிக் குறைத்து எழுதுவது என் நோக்கம் அல்ல. ஆனால் காமராஜைப் பற்றிய முழு விவரங்களைத் தெரிவிக்கும்போது ராஜாஜியைக் குறிப்பிட்டுத்தான் ஆகவேண்டியிருக்கிறது.''

சத்தியமூர்த்தியும் ராஜாஜியும் தீவிர சொந்தக் கருத்துக்கள் கொண்டவர்கள். அவர்களுக்குள் கருத்து வேறுபாடுகளும் உண்டு. எனினும் சத்தியமூர்த்தி தமது இறுதி நாள் வரை ராஜாஜியிடம் பெரு மதிப்புக் கொண்டு பழகி வந்தார். இதே போல் காமராஜருக்கும் ராஜாஜிக்கும் இறுதி நாள் வரை உறுதியான நட்பு இருந்து வந்தது. சந்தர்ப்பச் சூழ்நிலைகளை யொட்டி

# தேவை (விளம்பரங்கள்) ஜாக்கிரதை!

குறிப்பு: தினசரிப் பத்திரிகைகளில் 'தேவை' விளம்பரங்கள் தினசரி ஏதாவது வந்த வண்ணமிருக்கின்றன. அவைகளுக்கெல்லாம் பலன் இல்லாமலா விளம்பரம் கொடுப்பார்கள்?

**"கொடுத்த விளம்பரங்களும்!"** | **"கிடைத்த பலன்களும்!"**



சினிமாத் துறையில் புகழ் பெற்ற மேக்கப் மேனாகப் பணியாற்றும் என் 18 வயது பையனுக்கு அழகிய மணமகள் தேவை!

தோழி: என்ன அப்படிப் பார்க்கறீங்க! உங்கள் பையன் தான் புகழ் பெற்ற மேக்கப் மேனாயிற்றே. மேக்கப் போட்டுக் கொண்டால் எல்லாம் சரியாகப் போய்விடும்.
பையனின் அப்பா: ??!!?....



நாங்கள் தயாரித்துக் கொண்டிருக்கும் "பலே திருடர்கள்" படத்துக்கு பைனான்ஸ் செய்ய பைனான்ஸியர்கள் தேவை! நேரில் வரவும்.

மூன்று திருடர்கள்: (கையில் இருடிய பணமூட்டையுடன்) சார்! உங்களது "பலே திருடர்கள்" படத்துக்கு பைனான்ஸ் செய்ய வந்திருக்கோம்.
படாதிபதி: ??!!!?.....



என்னுடைய திருட்டுப் பையனுக்கு நல்ல குணமுள்ள அழகிய மணமகள் தேவை. விருப்பமுள்ளவர்கள் உடன் விண்ணப்பிக்கவும்.

இன்ஸ்பெக்டர்: எங்கே அந்தத் திருட்டுப் பையன்?
பையனின் தந்தை: மன்னிக்கணும் சார்! பாழாய்ப் போன பத்திரிகைக்காரன், "குருட்டுப் பையன்னு" அச்சடிக்கறத்துக்குப் பதிலா திருட்டுப் பையன்னு போட்டுட்டான்!

---

பெருந் தலைவர்களிடம் கருத்து வேறுபாடும் இருக்கும்; தேச நலனுக்காகப் பிடிவாதம் காட்டிய சந்தர்ப்பமும் இருக்கும்; விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையும் இருக்கும். இவை யெல்லாம் இருப்பதால்தான் அவர்கள் பெருந் தலைவர்கள் ஆகிறார்கள்! அந்தச் சந்தர்ப்பச் சூழல்களை அப்படி அப்படியே எடுத்துக்காட்டி நடந்ததை நடந்தபடி விவரிப்பது மட்டுமே வரலாற்று ஆசிரியனின் வேலையாக இருக்க வேண்டுமேயொழிய உள் நோக்கங்களைக் கற்பித்து ஒருவரை உயர்த்துவதற்காக இன்னொருவரைத் தாழ்த்த முயல்வது முறையாகாது.

பிரதமர் நேருவுக்கும், டாண்டனுக்கும் கருத்து வேறுபாடு ஏற்பட்டு, பாரதம் நேருஜியின் தலைமையை இழக்குமோ என்ற நிலையில் காமராஜ் செயலாற்றிய விதம் நாட்டுக்கு நேருஜி தலைமையை நிரந்தரமாக்கித் தந்தது.

இப்படிப் பல பணிகள் அகில இந்திய ரீதியில் ஆற்றிக் காமராஜ் தமிழர்களின் உள்ளத்தில் நிரந்தர இடம் பெற்றுவிட்டார். அவற்றையெல்லாம் கோவையாக ஆசிரியர் இந்நூலில் வடித்துக் தந்திருக்கிறார். காமராஜர் காலமான பிறகு அவரைப் பற்றி வந்த நூல்களில் இது கவனத்துக்குரிய ஒன்று.

பிரசுரம்: பூம்புகார் பிரசுரம், 109, மண்ணடிசாமி கோயில் தெரு, சென்னை–13; விலை: ரூ. 3.90. (மலிவு பதிப்பு)

## மாறுதல்

மல்லிகாவும் கல்யாணியும் நாம் அன்றாடம் பார்க்கும் பெண்கள்தாம். ஆனால் அவர்களுக்குக் கல்யாணமானவுடன் அவர்கள் மன இயல்புகளில் எத்தகைய மாறுதல்கள் ஏற்பட்டுவிடுகின்றன. அதை ஆசிரியர் உணர்ந்து தெரிவிக்கும் வாக்கியங்கள் மிகச் சிறப்பானவை.

"மன்னி" என்ற கதையில் அந்த மைத்துனன் பாத்திரமும் பேச்சும் மிக அருமையாக இருக்கின்றன. மன்னி பிறந்த வீட்டுக்கு வந்து மாடியில் பள்ளிக்கூடம் நடத்துகிறாள். "உன் அண்ணன் சம்பாதிக்கும் அளவு இல்லாவிட்டாலும் அதிலே பாதிக்கு மேல் சம்பாதிக்கிறேன். இந்த விஷயம் உன் அண்ணனுக்குத் தெரியாது என்றே நினைக்கிறேன். தெரிந்தால் நிச்சயம் தேடிக் கொண்டு வந்திருப்பார் இல்லையா?' என்று சொல்லிச் சிரித்தாள்" என்று முடிக்கிற போது சாட்டை கொண்டு அடிப்பது போல் 'சுரீல்' என்கிறது. அத்துடன், "சுப்பிரமணிய பாரதி இன்று இருந்தால் என் மன்னியின் முதுகில் தட்டிக் கொடுப்பார்" என்று ஆரம்பத்தில் மன்னியின் பாத்திரத்தைக் கோடி காட்டியது முற்றிலும் சரி என்று சொல்ல வைக்கிறது! நல்ல புதுமைப் பெண்!

'இந்த மண்ணும் இன்னொரு மண்ணும்' என்ற கதையும், 'ஒன்று இரண்டு மூன்று' என்ற கதையும் நம்மவர் மேல்நாட்டு மோகம் கொண்டு உள்ளாகும் உபாதைகளை வெகு நேர்த்தியாக எடுத்துக் காட்டுகின்றன.

ஒவ்வொரு கதையும் புதுப் புது பாத்திரங்களை அறிமுகப்படுத்துகிறது. நுட்பமான மன இயல்புகளை மிகத் தெளிவான குழப்பம் இல்லாத ஆற்றொட்டம் போன்ற நடையில் படம் பிடித்துக் காட்டியுள்ளார் ஐராவதம்.

—எஸ்.வி.எஸ்.

பிரசுரம்: இலக்கிய சங்கம்; 23 பி.எப். க்வார்ட்டர்ஸ், சென்னை 600034; விலை: ரூ. 7.

GEMINI

# ஜெமினி டீ

## தேயிலைச் சுவையிலே ராஜ திலகம்




இதோ, செழுமைத் தேயிலை ஜெமினி.
நாவிலே நறுமண 'தர்பார்'—
கெட்டித் தேநீர் தந்திடும் ராசி—எனவே
கோப்பைகள் அதிகம் அளித்திடும்.
கொண்டாடத் தக்க சிக்கனம் இது.
ஜமாய்த்துப் பருகுவீர் இனி —

**ஜெமினி டீ**

**டாடா-ஃபின்லே படைப்பு**

dCA/TFGT/2e Tam.

# மலரும் பூவெனப் பிள்ளை வளர்ந்திடப் பலமான துணை—

# இன்க்ரிமின்*

பட்டுப் போன்ற பாப்பாவின் வளர்ச்சியிலே—முதலிரண்டு ஆண்டுகள்...மொட்டு விரியும் நேரம்—சிட்டுப்போல் பறக்க சிறகு முளைக்கும் பருவம்—இந்த முக்கியமான பருவத்திலே உங்கள் கண்மணிக்குக் கட்டாயம் தேவை—இன்க்ரிமின். பின்னர் பாருங்களேன் அவன் வளர்ச்சியை! பசித்துப் புசிப்பான்...உண்ணும் உணவெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக மாறும். நலம் தரும் வைட்டமின்களோடு, உங்கள் மகனின் வளர்ச்சிக்கு மிக மிக அத்தியாவசியமான அமினோ அமிலம், லைஸின் யாவும் நிறைந்தது இன்க்ரிமின்.

அடடே!
என்ன வளர்ச்சி!
உண்டு வளர்வான்
கண்டு மகிழ்வீர்!

Incremin
drops LYSINE VITAMINS
TONIC APPETITE
STIMULANT

## இன்க்ரிமின்* டானிக்

டிராப்ஸ்—2 மாதங்கள் முதல் 2 வயது வரையில்
ஸிரப்— 14 வயது வரையில்

**உணவையெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக்கும்—உங்கள் பிள்ளை பூவாய் மலர்ந்து சிரிக்கும்!**

டாக்டர்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமான பெயர்—

Lederle ஸைனமிட் இந்தியா லிமிடெடின் ஒரு பிரிவு

*அமெரிக்கன் ஸைனமிட் கம்பெனியின் ரெஜிஸ்டர்டு டிரேடு மார்க்

Sista's-INC-364C-R/76Tam

# சேரமான் காதலி

கண்ணதாசன்

## அத்தியாயம் 5

## "நாகர்கோவில்"

மலை நாட்டில் அப்படி ஒரு தனி ஆட்சி நடப்பதை இதுவரை அறிந்திராத சேரமான், அந்தச் சூழ்நிலைகளைக் கண்டு ஆச்சரியமுற்றார்.

கொங்கு நாட்டையும், கூடல் நாட்டையும் ஒரு சேரச் சந்தித்து வெல்லக்கூடிய ஆற்றல் படைத்த அந்தத் தோள்கள், சாதாரண மலைவாசிகளுக்கு அடிமையாகிவிட்டதை எண்ணி, அவர் வெட்கப்பட்டாலும், அந்தப் புதுமையான சூழ்நிலையில் திகைப்புற்றவராகவும் காணப்பட்டார்.

'வேளிர் குடியினர் மற்ற மலைஜாதியினரைவிட நாகரிகம் வாய்ந்தவர்கள்' என்று அவர் நினைத்திருந்தார்., ஆனால் அவர்களிடையேயும் ஒரு சிலர் பரம்பரைப் பழக்கவழக்கங்களில் மூழ்கிக் கிடப்பது அவருக்கு அப்போதுதான் தெரிந்தது.

பகைவனைக் கைது செய்து கட்டி வைத்துவிட்டு, நகராக்களை முழங்கி நாட்டியமாடும் ஆதிவாசிகளின் மனோபாவம் மலைமான் குடியினருக்கும் இருப்பது கண்டு அவர் வியந்தார். எனினும் ஒன்றை அவர் காணத் தவறவில்லை.

பழக்க வழக்கங்கள் எப்படி இருந்தாலும் தரங்கிணியின் அழகு, மற்றக் கேரளப் பெண்களின் அழகுக்கு ஈடு கொடுப்பதாகவே இருந்தது.

நல்ல குளிர்ந்த காற்றடிக்கும் இயற்கையான சூழலில் கட்டுப்பட்ட நிலையில் அவர் நின்றார். எருமையை வாட்டுவதற்காக ஏற்றப்பட்ட நெருப்பின் கதகதப்பு அவர் உடம்புக்கு இதமாக இருந்தது. அதைவிட அடிக்கடி தரங்கிணி அவர் கன்னத்தைத் தட்டி நாட்டியமாடியது அவருக்கு வேடிக்கையாக இருந்தது.

மலையர் தலைவன் அஞ்சலவேள் தரங்கிணியையும் மற்ற பெண்களையும் அங்கேயே விட்டுவிட்டு மற்ற வீரர்களை அழைத்துக் கொண்டு மலையின் உட்பகுதிக்குச் சென்றுவிட்டான்.

'திருவஞ்சைக் களத்துக்கு முடிசூட்டப்பட்ட மூன்றாம் சேரமான் இவர்தான்' என்பது அஞ்சலவேளுக்குத் தெரியவில்லை. 'படைத் தளகர்த்தர்களில் ஒருவர்' என்றே அவன் கருதியிருந்தான்.

அவனைப் பொறுத்தவரை, திருவிதாங்கோட்டுச் சந்தைக்குக்கூட ஒரே ஒரு முறைதான் போயிருக்கிறான். 'இரண்டாம் சேரமான் பெருமாள்' என்ற குலசேகர ஆழ்வார் முடிதுறந்த சேதி மட்டும் அவனுக்குக் கிடைத்திருந்ததே தவிர, வஞ்சியின் புதிய மன்னர் பற்றிய மற்ற விவரங்கள் அவனுக்குத் தெரியவில்லை. திருவிதாங்கோட்டு முடிசூட்டு விழாவைத்தான் அவன் அறிவான்.

காட்டிலே வேலை செய்து கடமை முடித்த பெண்கள், இரவிலே கூடுமிடத்தில்தான் சேரமான் கட்டப்பட்டிருந்தான். ஆகவே இயற்கையாகவே அங்கு வரும் வேளிர் பெண்கள், அன்று சிலர் கைது செய்யப்பட்டிருப்பதைக் கேட்டு வேடிக்கை பார்க்கவும் வந்தார்கள்.

அந்தப் பெண்களிலே பலருக்கும் கள் அருந்தும் பழக்கம் இருந்தது. 'நறவு' எனப்படும் கள்ளை அவர்கள் 'நறா' என்று அழைத்தார்கள்.

நேரம் ஆக ஆக, அவர்களில் கன்னிகளாக இருந்தவர்களுடைய காதலர்கள், கல்யாணமான பெண்களின் கணவன்மார்கள் ஆகியவர்கள் 'உண்டாட்டுப் படலம்' நடத்த அங்கு வந்து சேர்ந்தார்கள்.

ஆடிக் களிப்பதும் சிறிது நறவு அருந்துவதுமாக இருந்தாள் தரங்கிணி. இரவு நேரத்தில், மலைவாசிகளைத் தவிர வேறு யாரும் மலையின் மீது ஏறவோ, மலையிலிருந்து இறங்கவோ முடியாது.

அந்தத் தைரியத்தில் சேரமானின் கைக் கட்டுகளையும் அவள் அவிழ்த்துவிட்டாள்.

காட்டுச் சூதங் கம்புகள் எரிக்கப்பட்ட வெளிச்சத்தில், பகலில் கவனித்ததைவிட அதிகமாக அவள் அழகைக் கவனித்தார் சேரமான். அவள் கழுத்திலே அணிந்திருந்த 'புலி நகம்' அவர் கருத்தைக் கவர்ந்தது.

உதயகிரி மலையில் அவ்வளவாகச் சிறுத்தைகள் கிடையாது. இருப்பினும் அந்த மலையோடு தொடர்பு அறுந்து போய் நிற்கும் பல மலைகளில், சிறுத்தைகளும் காட்டு யானைகளும் உண்டு.

அந்த மலைகளுக்குச் சென்று அவற்றை வேட்டையாடி, புலிநகமும், யானைத் தந்தமும் கொண்டு வருவது உதயகிரி மக்கள் வழக்கம்.

ஆடவர்களில் சிலர் புலித் தோல் அணிந்திருந்ததையும் சேரமான் பார்த்தார். துணிமணிகள் அணிந்த பெண்களும் அங்கே இருந்தார்கள்.

துணி மணி அணியும் பழக்கம் இருக்கும் போது, தரங்கிணி மட்டும் ஏன் பறவை இறகுகளால் ஆன ஆடை அணிந்திருந்தாள்? மலைவாசிகளின் அழகான அந்தத் தேசிய உடையில் அவளுக்கு இருந்த மோகம் அவருக்குப் புரிந்தது.

அவள் பாடிய பாடலில் செம்மையான மலையாளக் கொடுந் தமிழ் வார்த்தைகள் நிறைந்து காணப்பட்டன. கொச்சையாக அவள் பாடிய போதும் சங்கம் மருவிய காலத்துத் தமிழ்ச் சொற்கள் பலவற்றை அதில் கண்டுபிடிக்க அவரால் முடிந்தது.

தரங்கிணி அளவுக்கு மீறிய போதையில் இல்லை. 'இந்திரர் அமிழ்தம் இது வெனக் கருதிச் சந்திரன் இறங்கித் தவழும் உதமலை' என்றவள் பாடினாள். சித்திர வேலைப்பாடு அமைந்த ஒரு கைப் பாத்திரத்தில் நிறைய நறவினை எடுத்து அவர் முன்னே நீட்டினாள்.

தன் கரங்களால் வாயையும் மூக்கையும் பொத்திக் கொண்டு, ''இது எனக்குப் பழக்கமில்லை'' என்றார் சேரமான்.

அவள் சிரித்தாள். அது என்னமோ, 'குயில் விட்டு விட்டுக் கூவுவது' போல அவருக்குக் கேட்டது.

அவள் அருகே வந்து, மெதுவாக, ''நின் பெயர் என்ன?'' என்று கேட்டாள் தரங்கிணி.

தன்னை யாரும் அறிந்து கொள்ளவில்லை என்பதை முன்னே தெரிந்து கொண்டிருந்த சேரமான், சுருக்கமாகத் தன் பெயரை, ''ரவி'' என்றார்.

''நீ எழிலாக இருக்கிறாய்!'' என்றாள் அவள்.

''ஏன்? நீயும்கூடத்தான்!'' என்றார் அவர்.

''இம்மலையின் பருவம் எஞ்ஞான்றும் இளவேனிலே, ஆதலின் என் தோற்றம் அழகு குலையாதது!'' என்றாள் அவள்.

அந்தத் தமிழை அவர் வெகுவாக ரசித்தார்.

''இங்கு கல்விச்சாலைகள் உண்டா?'' என்று அவர் கேட்டார்.

''எங்களுக்கு நாங்களே!'' என்று பதில் சொன்னாள் தரங்கிணி.

அவளிடம் பல விஷயங்களைப் பேச வேண்டும் போல அவருக்குத் தோன்றி விட்டது. 'பழம் பெரும் தமிழ்க் குடியினர் ஆயவேளின் குடியினர்' என்று கேள்விப்பட்டிருந்த அவருக்கு, நீண்ட காலத்து மரபுகள் பற்றி அவளோடு உரையாட வேண்டும் போல் தோன்றிற்று.

சுற்றியிருந்த ஆண்களும் பெண்களும் சத்தமிட்டுச் சிரித்ததும், கட்டிப் பிடித்து விளையாடியதும் அவரது ரசனைக்கு ஏற்றதாக இல்லை.

'வேடிக்கைக் காட்சிகளை ரசிப்பதை விட, சில விவரங்களைத் தெரிந்துகொள்வது நலம்' என்று அவரது அரசியல் உள்ளம் கூறிற்று.





தரங்கிணியும் நன்கு விவரம் தெரிந்தவளாகவே அவர் கண்களுக்குத் தென்பட்டாள்.

''நான் உன்னோடு நிறையப் பேச வேண்டும்!'' என்றார் அவர்.

''நன்று நவிலுங்கள்!'' என்றாள் அவள்.

சரி! சரி! உதயகிரி மக்கள் தொல்காப்பியர் காலத்திலேயே வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பது அவருக்குப் புரிந்தது.

''யான் சேர நாட்டுத் தளபதி. இம்மலை பற்றிய வழக்காறுகள், மரபுகள் சிலவற்றை நின்பால் அறிந்து கொள்ள வேண்டும்!'' என்றார் அவர்.

உடனே அவள் சாதாரணத் தமிழில் ''அப்படியா?'' என்றாள்.

அது அவருக்கு வேடிக்கையாக இருந்தது. காலங்களால் மாறியும் மாறாமலும் இருக்கும் அவளது மழலை மொழியே, சுவைமிகுந்த ஒன்றாக அவருக்குப்பட்டது.

''இவர்கள் களி மயக்கத்தில் இருக்கிறார்கள், பொழுது நடக்க நடக்கப் புலம்புவார்கள். இவ்விடம் நல்லதன்று. யாம் நாகர்கோவிலுக்குப் போவோம்'' என்றாள் அவள்.

''அது எவ்விடம்?'' என்று கேட்டார் சேரமான்.

''அதோ — ஒரு கல் தொலைவில் கனல் எரிகிறது தெரிகிறதா?'' என்றாள்



## திருப்பதி கல்யாணம் அய்யங்கார்

திரு ஸ்ரீநிவாஸ ராகவாச்சாரியார் சகல கல்யாண குணங்களும் பொருந்தியிருந்ததால்தானோ என்னவோ கல்யாணம் அய்யங்கார் என்ற பெயரிலேயே பிரபலமாக விளங்கினார். திருப்பதியில் வாழ்ந்த இவர், தமது உபகார சிந்தையாலும் தமிழ்ப் புலமையாலும் அவரை அறிந்தவர்கள் அனைவரது நன்மதிப்பையும் பெற்றிருந்தார். கம்பராமாயண விரிவுரையில் மன்னர். இவர் சம்பந்தப்பட்டிருந்த ஆன்மீக, கல்வி, கலாசார, அறநிலையங்கள் பலப் பல. ஆசார்ய தீபப் பிரகாசர், சம்பிரதாய சுதாகரர், சத் சம்பிரதாய பூஷணம் போன்ற பல சிறப்புப் பட்டங்களைப் பெற்றவர். அண்மையில் திரு கல்யாணம் அய்யங்கார் வைகுண்ட பதவி அடைந்தார். அவரது குடும்பத்தினர், நண்பர்களுக்கு நமது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

அவள். சேரமான் கூர்ந்து கவனித்தார். மலையின் நெருப்பு வெளிச்சம் ஆங்காங்கு தெரிந்தாலும் ஒரே ஒரு இடத்தில் மட்டும் சீராகவும் வரிசையாகவும் தெரிந்தது.

அவள், 'போகலாம்' என்று சொல்வதற்கு முன்னாலேயே சேரமான் நடக்கத் தொடங்கினார்.

''செல்லக் கிடக்க'' என்றாள் அவள். சேரமான் நின்றார்.

அங்கு ஒரு மரத்தின் கிளையில் இருந்து தொங்கிக் கொண்டிருந்த சலங்கை போன்ற மணியை அவள் அசைத்தாள். சத்தம் போட்டுக் கொண்டிருந்த அத்தனை பேரும் அப்படியே அசையாது நின்றார்கள்.

''மகளிர் இருவர்'' என்றாள் அவள்.

இரண்டு பெண்கள் எரிந்து கொண்டிருக்கும் கழிகளோடு அவள் அருகில் நடந்தார்கள். அவள் முன்னால் நடக்க, சேரமான் பின்னால் நடந்தார். அந்தச் சூழ்நிலையும் அந்த மொழியும் அவருக்கு வெகு சுகமாக இருந்தன. அங்கேயே தங்கியிருக்கலாம் போலவும் அவருக்குத் தோன்றிற்று.

படையெடுப்புக்களாலும் நாகரிகக் கலப்புக்களாலும் சமவெளி மக்கள் தான் மாறியிருக்கிறார்கள்; மலைவாழ் குடியினர் பழைய மரபுகளை அப்படியே காப்பாற்றி வருகிறார்கள்; எவ்வளவு அழகான தமிழ் வார்த்தைகளை இவள் மழலை மொழியில் உச்சரிக்கிறாள் ?

—சேரமான் சிந்தித்தபடியே அவள் பின்னால் நடந்து கொண்டிருந்தார்.

மெல்லிய காற்றில் தவழ்ந்து வந்த சந்தன வாடை, மகிழ மலர் வாடை, அனைத்தும் அவர் மனத்தில் புதிய பரவசத்தை உண்டாக்கின.

தரங்கிணி நடந்து சென்றபோது சில மான்கள் அச்சமில்லாமலேயே அவள் எதிரில் வந்து நின்றன. அவற்றை அவள் தட்டிக் கொடுத்து விலக்கினாள்.

ஓர் இடத்தில் காட்டு எருமைகள் கூட்டமாக ஓடின. ஒரு சிறிய ஏரிக்குள்ளே அவை இறங்கின.

அவை இறங்கிய வேகத்தில் ஏரியில் இருந்த மீன்களில் சில துள்ளிக் கரையிலே விழுந்தன. நெருப்பு வெளிச்சத்திலேயே அவற்றைக் காணச் சேரமானால் முடிந்தது.

அழகான ஒரு கோயிலின் முன்னே அவர்கள் வந்து சேர்ந்தார்கள்.

அது ஒரு சுதைக் கோவில்.

களிமண்ணும் சுண்ணாம்பும் கொண்டு கட்டப்பட்டது.

அந்தக் கோயிலின் முன் பக்கச் சுவரில், வாசலுக்கு இருபுறமும் 'சாரையும் சர்ப்பமும் பின்னியிருப்பது' போல் ஓவியம் இருந்தது.

இருவருக்கும் வழிவிட்டு இரண்டு பெண்களும் நெருப்புக் கழிகளோடு இருபுறமும் ஒதுங்கி நின்றபோது, அந்தப் படங்களை அவர் பார்த்தார்.

அந்த வாசலிலேயே ஒரு சங்கு வைக்கப்பட்டிருந்தது.

அது ஒரு வலம்புரிச் சங்கு.

அந்தச் சங்கை எடுத்து அவள் ஊதினாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் கோயிலின் உட்புறத்திலிருந்து, தொண்ணூறு வயது மதிக்கத்தக்க 'குடுகுடு' கிழவர் ஒருவர் கையில் தீப்பந்தத்தோடு காட்சி அளித்தார். அவர் வெளியே வரவில்லை. தாமும் ஒரு சங்கை ஊதினார்.

தரங்கிணியும் அவரும் மாறி மாறி மூன்று முறை சங்கை ஊதினார்கள்.

பிறகு தரங்கிணி சேரமான் பக்கம் திரும்பி ''வருக'' என்றாள்.

உள்ளே இருந்த கிழவர், மடமடவென்று சில கழிகளுக்கு நெருப்பை

வைத்தார். கோயிலின் உட்பகுதி பிரகாசம் அடைந்தது.

தரங்கிணியைத் தொடர்ந்து உள்ளே நுழைந்த சேரமான், வாசற்படியைத் தாண்டியதுமே பயந்து நின்றுவிட்டார்.

ஒரு பிரம்மாண்டமான நாகப் பாம்பு அவர் முன்னே படமெடுத்து நின்றது.

தரங்கிணி அதன் முன்னாலே மண்டியிட்டு, ஏதோ ஒரு சுலோகத்தை உச்சரிப்பது போல உச்சரித்தாள். படமெடுத்த பாம்பு அப்படியே படத்தைச் சுருக்கிக் கொண்டு தலை தாழ்த்தி, மரியாதை செலுத்துவது போல் தரையிலே தலையை வைத்தது.

பின் மெதுவாக ஊர்ந்து சென்றது.

தரங்கிணி அங்கேயே நின்றாள். சேரமானும் அங்கேயே நின்றார்.

உள்ளே சென்ற நாகம், வாயிலே ஒரு மலரைக் கவ்விக் கொண்டு வந்தது.

தரங்கிணி இடது கையின் மீது வலது கையை வைத்து, பணிந்து அதை வாங்கிக் கொண்டாள். பிறகு அது முன்னால் செல்ல அவள் பின்னால் சென்றாள். அவளுக்குப் பின்னால் சேரமான் சென்றார்.

'உஸ் உஸ்' என்ற சத்தம் எங்கும் கேட்டுக் கொண்டிருந்தது.

'கர்ப்பக் கிரகம்' போன்ற ஒரு சிறிய அறை, அதற்கு மூன்றடி உயரம் மட்டுமே உள்ள சிறிய வாசல். அந்த வாசலின் முன்னே வந்து அவள் மண்டியிட்டாள்.

சேரமானை நிமிர்ந்து பார்த்தாள்.

அவரும் அங்கே மண்டியிட்டார்.

இருண்ட உட்பகுதியில் விளக்கு எதுவும் இல்லாமலேயே வெளிச்சம் தெரிந்தது.

''கண்டு காணும் ஒளி, இயற்கையின் தோற்றம்'' என்றாள் தரங்கிணி.

குருவிடம் சிஷ்யன் பாடம் கேட்பது போல் அதைக் கேட்டுக் கொண்டார் சேரமான்.

சிறிது நேரத்தில் உட்புறத்தில் ஒரு பெரிய நாகம் படமெடுத்து நின்றது.

சுமார் பத்துப் பதினைந்து நாகங்கள் படமெடுத்த பாவனையில் அந்தப் பெரிய நாகத்தைச் சுற்றிச் சுற்றி வந்தன.

அப்போது அந்த முதியவர் இடைவிடாது சங்கை ஒலித்துக் கொண்டிருந்தார்.

ஒரு மண் பாத்திரத்தில் தண்ணீரைக் கொண்டு வந்து அவள் முன்னாலே வைத்தார், அந்தக் கிழவர்.

பெரிய நாகம் உள்ளிருந்து வெளியே வந்து தண்ணீரில் தலையைவிட்டு விட்டுத் திரும்பிப் போய்விட்டது. அந்தத் தண்ணீரில் ஒரு கை அள்ளிக் குடித்தாள் தரங்கிணி.

'நீங்களும் குடியுங்கள்', என்பது போல் சேரமானுக்கு ஜாடை காட்டினாள்.

'ஐயோ! பாம்பு குடித்த தண்ணீரையா?' சேரமான் பயந்தே போய்விட்டார். தண்ணீரை அள்ளிக் குடிப்பது போல முழங்கை வழியே விட்டுவிட்டார்.

பிறகு அந்தச் சிறிய வாசல் கதவு தானாகச் சாத்திக் கொண்டது. கிழவரையும் காணவில்லை.

கோயிலின் முன் பகுதி மண்டபத்தில் வந்து அமர்ந்தாள் தரங்கிணி.

அவள் எதிரிலே தானும் உட்கார்ந்தார் சேரமான்.

''இக்கோயில் காலங் கடந்தது; காலந் தோற்றுதது; ஆய் வணங்கியது இவ்விடம்'' என்றாள் அவள்.

சேரமான் தலையை ஆட்டிக் கொண்டே இருந்தார்.

''நச்சற்ற நாகங்கள் இம்மலையில் தான் உண்டு'' என்றாள் அவள்.

சேரமான் மேலும் தலையை ஆட்டினார்.

''நீ பற்றிக் கூறு'' என்றாள் அவள்.

'நீ பற்றி என்று சொல்லக் கூடாது; உன்னைப் பற்றி' என்று திருத்த அவர் நினைத்தார். ஆனால் வாயடைத்துவிட்டது.

''இங்கே யாரெனினும் பொய் கூறினால் ஏது நடக்கும் தெரியுமா?'' என்று அவள் கேட்டாள்.

மேலேயிருந்து ஒரு நாகம் அவர் கழுத்தில் விழுந்தது. சேரமான் அலறிவிட்டார். (தொடரும்)

ராஜாஜி சிந்தனை

**பொழுது புலர்ந்தது; கடமை அழைக்கிறது**

நாம் அடைந்துள்ள சுதந்திரம் ஒரு வாய்ப்புத்தான்; அதுவே முடிவல்ல என்பதைப் பல முறை நான் அலுப்புச் சலிப்பின்றி எடுத்துரைத்திருக்கிறேன். சுதந்திரம் பொழுது புலரும் நேரத்தைப் போன்றது. நம்மைக் கடமையாற்ற அழைக்கிறது. சுதந்திரம் என்பதற்கு மட்டும் தனியே ஓர் அர்த்தமும் இல்லை. அத்துடன் கடமையும் இணைந்து கடின உழைப்பாக மலரும்போதுதான் சுதந்திரத்தின் பயன்களை நாம் உணர முடியும்.

— ராஜாஜி நினைவு மலர்

# பரிசு பெறும் நால்வர்!

○ அழகாபுரி அழகப்பன்



○ லக்ஷ்மி ரமணன்

'கல்கி' என்னும் விருக்ஷத்தில் கனிந்த எழுத்தாளர்கள் எத்தனையோ பேர்! கல்கியைக் குருவாகக் கொண்டு எழுத்துப் பணியில் ஈடுபட்ட ஏகலைவர்கள் பல பேர். எழுத்தாளர் பரம்பரையை ஊக்கி உற்சாகப்படுத்தி வளர்த்த அந்த மாமேதையின் பண்பு அவர் மறைந்த பிறகும் தொடர்கிறது. 1976ம் ஆண்டு அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் 2200 எழுத்தாளர்கள் பங்கு பற்றினார்கள் என்பதே இதற்குச் சான்று. இந்தப் போட்டியில் பரிசு பெற்ற நால்வரையும் உங்களுக்கு அறிமுகப்படுத்துகிறோம்.

★ ராமநாதபுரம் மாவட்டம் வறட்சிப் பிரதேசமானாலும், ஊற்றுப் பெருக்கெடுக்கும் உணர்ச்சிப் பிரவாகமாக முதல் பரிசுக் கதையை எழுதினார் அழகாபுரி அழகப்பன். இவர் அமராவதிபுதூரில் வாசம் செய்கிறார். நூற்றைம்பதுக்கும் மேற்பட்ட சிறுகதைகள், குறுநாவல்கள் எழுதியுள்ள அழகப்பன் இரு நாவல்களும் படைத்துத் தந்துள்ளார். செட்டி நாட்டு மண்ணின் மணத்தைப் பரப்பி வருவதற்காக இவருக்கு நகரத்தார் பொன்னாடை போர்த்தி மகிழ்ந்தது குறிப்பிடத்தக்கது. 'தினமணி கதிர்' நாவல் போட்டியில் இந்த நாற்பது வயதுக்காரரின் நாவல் முதல் பரிசு ரூபாய் மூவாயிரம் பெற்றது.

அழகப்பனின் கற்பனை வளம் அவரோடு நின்றுவிடவில்லை; அவரது வாரிசுகளையும் தொடர்கிறது என்பது அரிய செய்தி. சிரிக்கச் சிரிக்கப் பேசும் அழகப்பனின் மகள் சந்திரா தேவி, ஆனந்தவிகடன் சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு பெற்றவள். மகன் 'வாளவர் கோன்' கல்கியில் அறிமுக எழுத்தாளர்! பேராசிரியர் கல்கி இருந்தால் இந்த எழுத்தாளர் குடும்பத்தைக் கண்டு எத்தனை சந்தோஷப்பட்டிருப்பார்!

மனிதனின் மன இயல்புகளை நுணுக்கமாக ஆராய்ந்து வரும் திரு அழகப்பன் ஓர் உயர் நிலைப் பள்ளி ஆசிரியர். விண்வெளி விஞ்ஞானக் கட்டுரைப் போட்டியில் முதல் பரிசும் ராஜரிஷி ராஜாஜியின் பாராட்டுரையும் பெற்றிருக்கிறார் திரு அழகப்பன். அழகாபுரி அழகப்பனின் 'கணங்களும் யுகங்களும்' கல்கி ரஸிகர்களின் பாராட்டுக் கடிதங்களை ஏராளமாகப் பெற்றது. கல்கியில் இவர் எழுதுவது முதல் தடவையானாலும் முதல் தரக் கதையைத் தந்ததற்காக அவரை எவ்வளவு வேண்டுமானாலும் பாராட்டலாம்!

★ நவீன கால நாகரிகத்தை நறுக்குத் தெறித்தாற்போல் சித்திரிக்கும் 'ராஜேஷ் பெண் பார்க்கிறான்' என்ற சிறுகதையைப் படைத்து இரண்டாவது பரிசு பெற்றார் ஸ்ரீமதி லட்சுமி ரமணன்.

இரண்டாம் பரிசு பெற்ற தந்தி கிடைத்ததும் அவர் அனுப்பிய கடிதத்தில், "கல்கி சிறுகதைப் போட்டியில் பரிசு பெற வேண்டும் என்பது என் நெடுநாளைய அவா. அது இப்பொழுதுதான் நிறைவேறியிருக்கிறது. கல்கியில் என் சிறுகதை 'மல்லிகைச் சரம்' பத்து ஆண்டுகளுக்குமுன் பிரசுரமாயிற்று......" என்று மகிழ்ச்சி வெள்ளத்தில் சொற்களை அடுக்குகிறார்.

ஸ்ரீமதி லட்சுமி ரமணனின் பெற்றோர் இட்ட பெயர் ரா. சுப்புலக்ஷ்மி. தில்லி இந்திரப்பிரஸ்தா கல்லூரியில் சரித்திர ஆனர்ஸ் படித்தவர். இவரது தந்தை திரு வி. ராமஸ்வாமி தில்லி வருமான வரி டிரிப்யூனல் அங்கத்தினராக இருந்து ஓய்வு பெற்றவர். 1959ல் 'ஆனந்தவிகடன்' நடத்திய மாணவர் திட்டத்தின் மூலம் எழுத்துலகுக்கு அறிமுகமானவர், லட்சுமி ரமணன். இதுவரையில் சுமார் ஐம்பது சிறுகதைகளை ஆனந்த விகடன், சுதேசமித்திரன், தினமணி கதிர், கலைமகள் பத்திரிகைகளில் எழுதிப் பண்பட்டவர். இவரது இருபது கட்டுரைகளும் அவற்றில் வெளியாகியுள்ளன.

சுப்புலக்ஷ்மியின் கணவர் திரு ரமணன் ஜெய்ப்பூரில் ராஜஸ்தான் மாநில சர்க்காருக்குக்

○ வேங்கடரமணி



○ கணபதி (ஜனமேஜயன்)



காரியதரிசியாக இருக்கிறார் ! நம் தமிழக ஆளுநர் சுகாடியாவின் மாநிலத்தில்தான் !

பெண்களின் வயதைக் கேட்கக் கூடாது. அது பண்பல்ல ! ஸ்ரீமதி லட்சுமி ரமணனின் இலக்கிய வயது பதினேழு ! 'என் உண்மை வயதை அவசியம் தெரிந்து கொள்ள வேண்டும் என்றால் அதனுடன் பத்தொன்பதைக் கூட்டிக் கொள்ளுங்கள்' என்கிறார் ஸ்ரீமதி ரமணன், நாசூக்காக.

இவருடைய ஆசை நிறைய எழுதிப் பத்திரிகை ஆசிரியர்களைத் திணற அடிப்பது என்கிறார் ! 'ராஜேஷ் பெண் பார்க்கிறான் !' போன்ற நல்ல சிறுகதைகளை எழுதினால் எந்த ஆசிரியரும் இந்தத் திணறலைப் பொருட்படுத்த மாட்டார் என்பதைச் சொல்லி வைக்கிறோம் !

★ கீதை வாக்குப்படி பலன் கருதாமல் பணியாற்றுவது என்பது இலக்கிய உலகில் மிகவும் சிரமம். பரிசு கிடைக்கிறதோ, இல்லையோ கதை பிரசுரமாகிறதோ இல்லையோ தம் பணி சிறுகதை எழுதுவதே என்று விடாப்பிடியாக எழுதிக் கொண்டிருப்பதுடன், ஒவ்வொரு கல்கி சிறுகதைப் போட்டியிலும் பங்கு பெற்றுக் கொண்டிருப்பவர் திரு கு. வேங்கடரமணி.

தஞ்சை மண்ணில் மருதூரில் வாசம் செய்யும் திரு கு. வேங்கடரமணி சென்னையில் ஆங்கிரஸ வைகாசி முதல் தேதி பிறந்தவர் ! பெண்கள்தான் வயதைக் கூற நாணப்படுவார்கள்! சுற்றி வளைத்துச் சொல்வார்கள். இவர் தமிழ் வருஷம் கூறி நம்மைப் பஞ்சாங்கத்தைப் புரட்டிப் பார்க்க வைக்கிறார் ! இவரது அடக்கம் இவரைக் கிராமத்தின் இயற்கைச் சூழலில் அமர வைத்ததோடு அதிக விளம்பரம் தேடிக் கொள்ளாதவராகவும் ஆக்கியிருக்கிறது.

1957ம் வருஷம் திரு கு. வேங்கடரமணி முதல் சிறுகதையைப் படைத்து எழுத்துத் துறையில் அடியெடுத்து வைத்தவர். இது வரை ஓசைப்படுத்தாமல் இரு நாவல்களையும் இருநூறு சிறுகதைகளையும் படைத்திருக்கிறார். கல்கி வெள்ளிவிழா, தில்லி தமிழ்ச் சங்கம் வெள்ளிவிழா போட்டிகளில் சிறுகதைகளுக்குப் பரிசுகள் பெற்றிருக்கிறார்.

★ முழுமுதற் கடவுளான கணபதியின் பெயரைத் தாங்கிய ஜனமே ஜெயன் உதகமண்டலத்தின் அழகுச் சூழலில் பிறந்து வளர்ந்தவர். எழுத்து நடையில் மட்டுமின்றிக் கையெழுத்திலும்கூட அழகு விகசிக்கக் காணலாம்.

ஒரு கல்லூரியில் கணிதத் துறைப் பேராசிரியராகத் திகழும் திரு ஜனமே ஜெயன் எம். எஸ்ஸி. பட்டதாரி. இன்று சென்னை அடையாற்றில் வாசம் செய்யும் இவர் படைத்த சிறுகதைகளின் எண்ணிக்கை நாற்பது. கல்கியில் மூன்றாவது பரிசு பெறும் சிறுகதையே கல்கிக்கு இவர் எழுதும் முதல் கதை ! கல்கியின் காவல் தெய்வமும் கணபதியே அல்லவா ? கணக்குப் பேராசிரியர் கணபதிக்கு முதல் கதையிலே மூன்றும் பரிசு வழங்குவதில் இரட்டிப்பு மகிழ்ச்சி அடைகிறோம் !

— பி. எஸ். எம்.





# சிலம்புச் செல்வம்

ம.பொ.சி

**ப**ன்னிரண்டு வயது நிரம்பிய — ஆடலும் பாடலும் குறைவறப் பயின்ற — அழகையும் நிறைவுறப் பெற்றிருந்த மாதவியாள், சோழ மன்னனுடைய முன்னிலையிலே தனது நாட்டியத்தை அரங்கேற்றினாள்.

அந்நாளில் நாட்டியம் பயில்வோர் பயிற்சி முடித்ததும் முதலில் மன்னன் முன்புதான் அரங்கேற்றம் நிகழ்த்த வேண்டும். மன்னன் தன் கண்ணாரக் கண்டு, ''இவள் ஆடற் கலையில் தேர்ச்சியுடையவள்'' என்று அறிவித்து, அதற்கெனப் பரிசையும் வழங்கிய பின்னரே, நடனக் கலையை அரங்கேற்றும் நங்கை அதனைத் தொழிலாகக் கொள்ள வேண்டும். இதனால் பண்டைத் தமிழ் வேந்தர் கலைகளில் பொது அறிவையேனும் பெற்றிருந்தனர் என்பது புலப்படுகிறது.

மாதவியின் அரங்கேற்ற நிகழ்ச்சி புகார் நகரில் ஒரு பெருவிழாவாகவே நடைபெறுகின்றது. நங்கையர்க்கு நடனக் கலையைப் பயிற்றுவிக்கும் நட்டுவர்கள் கையில் கோல் வைத்துக் கொண்டிருப்பார்கள். நடன அரங்கிலே யாழ்; மத்தளம், குழல் ஆகிய இசைக் கருவிகள் போல ''தலைக் கோல்'' என்பதும் ஒரு கருவி.

இந்திரன் அவையிலே, அகத்தியரால் சபிக்கப்பெற்று, விந்திய மலையில் மூங்கிலாகப் பிறந்தான் அல்லவா சயந்தன்! அவனுடைய வடிவமாகவே தலைக்கோல் சொல்லப்படுகிறது. மாதவியின் நடன அரங்கேற்றத்துக்கு முன்பு தலைக்கோல் ஊர்வலம் நடைபெறுகின்றது புகார் நகரிலே! அந்த ஊர்வலத்திலே இளவரசர்கள், அமைச்சர்கள், தளபதிகள், நகரப் பிரமுகர்கள் எல்லாம் முன் வரிசையிலே அணியணியாக நடை போடுகின்றனர். அரசனுக்குரிய பட்டத்து யானை தனது துதிக்கையிலே தலைக்கோலை ஏந்திக் கொண்டு ஊர்வலத்தின் முன்னே செல்கிறது.

புகார் நகரின் முச்சந்தியிலே மாதவியின் நடனத்துக்கென மேடை அமைக்கப்பட்டிருக்கிறது. அந்த மேடையின் அருகில் வந்து ஊர்வலம் முடிகின்றது. மேடையின் மீது தமிழை முழுமையாகப் பயின்றறிந்த பெரும் புலவர் ஒருவர் இருந்து கொண்டு யானையிடமிருந்து தலைக்கோலைப் பெறுகின்றார். ஆம்; பட்டத்து யானையிடமிருந்து தலைக்கோலைப் பெறும் சடங்கு நட்டுவரைக் கொண்டு நிகழ்த்தப்பெறவில்லை. முத்தமிழ்ப் புலவரைக் கொண்டு நிகழ்த்தப்பெறுகிறது. அந்நாளில் கலைக்கும் தமிழ்ப் புலவனுக்கும் அவ்வளவு தொடர்பு இருந்தது.

மாதவியாள் வலது காலை முன்னே வைத்து மேடை மீது ஏறுகின்றாள். வலது காலை முன் வைப்பதை மங்கலமாகக் கருதுவது தமிழர் மரபு. மாதவியும் அந்த மரபைக் கடைப்பிடித்து மேடை ஏறினாள் என்பதனை மறந்துவிடாமல் சொல்லுகின்றார் இளங்கோ.

முச்சந்தியிலே, சோழ மன்னனின் முன்னிலையிலே — சாத்திரப்படி அமைக்கப்பட்ட மேடையிலே — மாதவி தனது நடனத்தைத் தொடங்குகிறாள். ''தோரிய மகளிர் வாரம் பாடுகின்றனர்'' — என்கிறார் இளங்கோ. ''தோரிய மகளிர்'' என்றால் ஏற்கெனவே நடனத் தொழிலில் தலைசிறந்து விளங்கி, பருவ முதிர்ச்சி காரணமாக அத்தொழிலிலிருந்து ஓய்வு பெற்றவர்கள் — என்கிறார் சிலப்பதிகார உரையாசிரியர்.

மாதவியாள் நடனமாடியதைச் சுருக்கமாக ஒரு வெண்பாவில் கூறுகின்றார் இளங்கோ.

எண்ணும் எழுத்தும் இயல் ஐந்தும் பண் நான்கும்
பண்ணின்ற கூத்துப் பதினொன்றும்
- மண்ணின்மேல்
போக்கினாள் பூம்புகார் பொற்றொடி மாதவி தன்
வாக்கினால் ஆடரங்கில் வந்து.

நடன அரங்கேற்றத்தின் முடிவிலே ஆயிரத்தெட்டுக் கழஞ்சு பொன் மதிப்புடைய பச்சை மாலை ஒன்றை மாதவிக்கு வழங்குகின்றான், சோழ மன்னன். அத்துடன் ''இவள் ஆடற் கலையில் தேர்ந்தவள் என்பதை அறிவிக்கும் வகையில் ''தலைக்கோல் அரிவை'' என்னும் பட்டத்தையும் வழங்குகின்றான். மன்னனிடம் பரிசையும் பட்டத்தையும் பெற்ற மாதவியாள், அவனிடமும், அரங்கில் குழுமியிருந்த கலைஞர்களிடமும் விடைபெற்றுக் கொண்டு வீடு திரும்புகிறாள். திரும்பும் வழியிலே, மன்னன் கொடுத்த பச்சை மாலையைத் தன் தோழியான கூனி என்பவளின் கையில் கொடுத்து, ஆயிரத்தெட்டு கழஞ்சு பொன் விலைக்கு அதனை விற்று வருமாறு ஆணையிடுகிறாள். அக்கால வழக்கப்படி மாலையை வாங்குவோன், மாதவிக்குக் காதலன் ஆவான். மாலையின் விலை ஓர் இரவுக்குப் பரிசமாம்! அப்படியானால், மாதவியின் இல்லத்தில் தங்கும் ஒவ்வொரு இரவுக்கும் பச்சை மாலை வாங்குவோன் ஆயிரத்தெட்டு கழஞ்சு பொன் கொடுத்தாக வேண்டும்!

மாதவியிடமிருந்து பெற்ற பச்சை மாலையை விற்பதற்குச் செல்வர் வீட்டு இளைஞர்கள் திரியக்கூடிய தெருவாகத் தேர்ந்தெடுத்து, அங்கு நின்று மாலையை விற்பவள் போல் பாசாங்கு செய்கிறாள் கூனி.

பாசாங்கு எதற்கு? அதனை இளங்கோவின் வாக்காலேயே அறிவோம்! (தொடரும்)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam Associate Editor: K. Rajendran.

# க்ராக்ஜாக் 'ருசிப் போர்'




## சரி, சரி... இரண்டும் சரியே

# பார்லே க்ராக்ஜாக்

# பிஸ்கட்டுகள்

## அனுபவம் புதுமை ரசித்திடும் கணமே!



REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசிய காசு